## பாலை வெறுத்த ராஜூ உவந்து பருகுகிறான் நான் நியூட்ரமுல் சேர்த்தபின்.



# இன்றோ நியூட்ரமுல் 'வஸ்தாது' அவன்தான்.

குழந்தைகளைப் பால் குடிக்க வைப்பது பெரும்பாடாக இருப்பானேன். இல்லையென்கிறார்கள் பல்லாயிரம் தாய்மார்கள். அவர்கள் வாழ்த்துவது நியூட்ரமுல் இனிமை, ருசிக்கு ருசி. பலத்துக்கு பலம்... கோக்கோ, பால்,




மால்ட் யாவும் செறிந்த நியூட்ரமுல்...பலேருசி. வளப்பமாக-அதிலுள்ளவை புரதச்சத்துக்கள், வைட்டமின்கள், உலோக தாதுக்கள் வளரும் உடம்புக்கு போஷாக்கு. ருசி-மயமான நியூட்ரமுல்... பருகப்-பருகப் பலம் பெருகும் பெருகும்.



மார்க்கெட் செய்வோர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ்
மில்க் மார்க்கெட்டிங்
:பெடரேஷன் லிமிடெட்,
ஆனந்த், குஜராத்

அமுல் படைப்பு

# நியூட்ரமுல் பருகப் பருகப் பலம் பெருகும் பெருகும்.

daCunha GCM-16 TM

# Kalki Shopping Page



2 பேண்டு
## தாபி
டீலக்ஸ்
பேட்டரி/மெயின்ஸ்
**நெல்கோ**
டாடா தயாரிப்பு
AUTHORISED DEALER:
**ARUNA & CO.,**
340, T. H. Road, Madras-600 021
PHONE: 553644 — 552728



2 பேண்டு
## புல்லெட்
**நெல்கோ**
டாடா தயாரிப்பு
AUTHORISED DEALER:
**SWITO SALES CORPORATION**
357, Mint Street,
Madras-600 001
PHONE: 38520

HMV
## *fiesta*
*popular*







India's largest selling record player.

Max. retail price Rs 499/- including excise duty. Local taxes extra.

## HMV STEREO 1010



Rs 1443/- Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




**HMV STEREO SYSTEMS**

Available at

**VIVEK & CO**
133, Royapettah High Road, Madras-600 004 Ph: 76923
205, Purasawalkam High Road, Madras-600 007 Ph: 663545

**RAJA RADIO & ELECTRICALS**
228, Royapettah High Road, Madras-600 014
Ph. 841533

**RADIO SERVICES**
10, Mount Road, Madras-600002 Ph: 86091
24, General Patters Road, Madras-600002 Ph: 88089

# Kalki Shopping Page




ஆம்! அதுமட்டுமல்ல, நான்கு வித அழகிய வண்ணங்களிலும் கிடைக்கிறது.



# வெஸ்டெர்லி

ஒரு "டெக்னோகிராட்ஸ் கம்பெனி பி. லிட்., சென்னை 600 058" தயாரிப்பு

National 16

## ஆண்களுக்கு தையற்கலை வகுப்புகள்

நேரிலும் தபால் மூலமும் 2 மாத / 6 மாத பகுதிநேர/முழுநேர வகுப்புகளில் பயின்று சுயமாக பொருளீட்ட ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. ஷிப்டில் உள்ளவர்களுக்கு வசதி செய்யப்படும். செய்முறை வகுப்புகள், தமிழ், தெலுங்கு ஆங்கில மலையாள மொழிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. முற்றிலும் எளிய நவீன முறையில் நடத்தப்படும் ஒரே ஸ்தாபனம்.

நேரில் வரவும் (அ) விபர புத்தகம் பெற ரூ. 2-00 M. O. செய்க.

**மனோஜ்**
**தையற் பள்ளி**
32, காந்தி இர்வின் சாலை எழும்பூர்
சென்னை-600008
(டென்னிஸ் ஸ்டேடியம் அருகில்)

(எந்த தேதியிலும் சேர்ந்துகொள்ளலாம்)

Admired for beauty
Bought for performance

# Bharat TV

## Urvashi



*Available at:*

**T. V. TRONICS**
Perambur Ph: 661533
Parrys Ph: 27427
Tiruvottiyur Ph: 554074

ACIL BT

# தரநிர்ணயம் செய்யப்பட்ட

அக்மார்க்

## ஸ்ரீதேவி

பிராண்ட்

## பிரியாணி அரிசி

பரிசுத்தமானது




அழகிய 1 கிலோ வண்ண பேக்கிங்கில் கிடைக்கும்

தயாரிப்பாளர்கள்
**மணி அன் கோ**
மணி காஸ்மில் 159, பேரூர் ரோடு
கோயமுத்தூர் 641 026

VSK MRM 931



இசைமணி சீர்காழி கோவிந்தராஜன் ''காஞ்சிப் பெரியவாளைப் பற்றி பாட்டு ஒன்று எழுதுங்கள். இசைத் தட்டாகப் பாடி அதனை வெளியிடப் போகிறேன்'' என்று எனக்கு அன்பு ஆணையிட்டார். பெரியவாளிடம் எனக்குப் பக்தி அசாத்தியம். கலவைக்கு அவர் அடிக்கடி செல்வதையும், பலர் ''அவர் பிறந்த இடம் கலவைதான்'' என்று கூறிய கேள்வி ஞானத்தையும் வைத்து ''கலவையில் ஒருநாள் பேரொளி பிறந்தது. காஞ்சியில் பெரியவராய்க் குருவெனச் சிறந்தது'' என்ற பல்லவியுடன் ஒரு பாட்டெழுதி அனுப்பி விட்டேன்.

அதன் பின்பு ஒருநாள் ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' பத்திரிகையில் காஞ்சிப் பெரியவாள் பற்றிய கட்டுரை ஒன்று வந்தது. முதல் பாராவிலேயே அவர் பிறந்த இடம் திண்டிவனம் என்று குறிப்பிட்டிருந்தது. எனக்குப் பகீர் என்றிருந்தது. 'எத்தகைய அபசாரம் செய்து விட்டோம்' என்று உணர்ந்து உடனே

# கலவையில் பிறந்த பேரொளி...

சென்னைக்குப் பயணமாகிச் சீர்காழி அவர்களைச் சந்தித்தேன். அவரோ என்னைப் பார்த்தவுடன், ''வாங்க! உங்களுடைய பாடலும், இன்னும் மூன்று பாடல்களும் சேர்ந்து நான்கு பாடல்கள் அடங்கிய சந்திர சேகர ஜெயேந்திர விஜயம் எல்.பி. இசைத் தட்டு சீக்கிரமே வெளி வந்து விடும். பாடல்கள் ''டேப்'' ஆகி கல்கத்தா சென்று விட்டன'' என்றார்! எனக்கு அழுகையே வந்து விடும் போலிருந்தது. மெதுவாக எனது தவற்றினைக் கூறினேன். அவரும் துணுக்குற்றார். மறுகணம், ''இல்லை எழில்மணி! அது தப்பான பாடலாக எனக்குத் தோன்றவில்லை. அப்படியிருந்தால் பெரியவாள் கருணையினாலே ''ரிகார்டிங்'' தடைப்பட்டிருக்கும். எதற்கும் அந்தக் கட்டுரையை முழுமையாகப் படியுங்கள்'' என்றார். மீண்டும் படித்தேன். திண்டிவனத்திலிருந்து பெரியவாள் தமது அம்மாவுடன் கலவைக்கு வர நேரிட்டதையும், காஞ்சி ஸ்ரீ சங்கராச்சாரியார் கலவையிலே சமாதி ஆன விவரமும், உடனே திண்டிவனத்திலிருந்து சிறுவனாக வந்த இவருக்குச் சற்றும் எதிர்பாராமல் கலவையில் ஞானஸ்நானம் நடைபெற்று அவர் பட்டத்துக்கு வந்ததையும், ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி ஸ்வாமிகள் எனப் பெயர் பெற்றதையும் விவரமாகப் படிக்கவும் சீர்காழி மகிழ்ச்சியால் பூரித்தார். ''பார்த்தீர்களா! கலவையில்தான் அவருக்கு சன்னியாசம். சன்னியாசம் என்பது மறு பிறவியென்பார்கள். தவிர தீட்சை பெறுவதே பேரொளி பிறந்ததாகும். ஆகவே, ''கலவையில் ஒருநாள் பேரொளி பிறந்தது. காஞ்சியில் பெரியவராய் குருவெனச் சிறந்தது'' என்ற வரிகள் உண்மையே! நீங்களும் கலங்கி என்னையும் கலக்கி விட்டீர்கள்'' என்று செல்லமாகக் கடிந்து கொண்டார். அப்போதும் எனக்கு மனத் திருப்தி இல்லை. அடுத்தமாதம் இசைத்தட்டு வந்தது. முதல் இசைத்தட்டை எடுத்துக் கொண்டு தேனம்பாக்கம் சென்றார். இசைமணியுடன் நானும் உடன் சென்றிருந்தேன்.

பெரியவாள் பூஜையிலிருந்தார். பக்தர்களில் சிலர் சீர்காழியைப் பாடுமாறு கேட்டுக் கொள்ள, அவர் சந்தேகத்துடன் ''பெரியவாள் பூஜையிலிருக்கும் போது பாடலாமா?'' என்று மிக மெல்லிய குரலில் என்னைக் கேட்டார். அதே நேரத்தில் உள்ளே பெரியவாள் அருகே பணி விடைகள் புரியும் ஒரு நண்பர் அறைக் கதவைத் திறந்து கொண்டு ''இங்கே சீர்காழி வந்திருக்கிறாராமே! பெரியவாள் அவரைப் பாடச் சொன்னார்'' என்று கூறவும் மெய்சிலிர்த்தார் சீர்காழி. கணீரென்று பாட ஆரம்பித்தார். ''கலவையில் ஒருநாள்'' பாடலைப் பாடும் போது உள் அறையின் கதவு படீரெனத் திறந்தது. பெரியவாள் சிவப் பழமாய் நின்றார். பாடலைக் கேட்டு விட்டு இசைத் தட்டைத் தொட்டு ஆசீர்வாதம் பண்ணினார். புன்னகை புரிந்தார். ''நான் அனுக்கிரகம் பண்ணின பாட்டுதான்டா அது! ஏன்டா குழந்தே குழம்பறே'' என்று என்னைப் பார்த்துக் கூறுவது போலிருந்தது அந்தப் புன்சிரிப்பு.

-நெமிலி எழில்மணி



# திரும்புமுனை

இயற்கையாகவே ஒருவருக்கு சங்கீத ஞானமும் ஆற்றலும் இருந்தாலொழியப் பிரகாசிக்க முடியாது. ஆனால் முன்னுக்கு வரச் சந்தர்ப்பங்களும் வாய்ப்பாக அமைய வேண்டும். அவ்வித திரும்பு முனைகளில், இசைத் துறையின் உங்கள் பிரிவிலேயே அன்றி வேறு பிரிவில் யாருக்கேனும் வழி காட்டினீர்களா என்று சிலரை வினவிய போது:



செம்மங்குடி

செம்மங்குடி வயலின் டி. என். கிருஷ்ணன் பற்றிக் கூறுகிறார்:

சுமார் 35 வருடங்களுக்கு முன்பு திருவனந்தபுரத்தில் நடந்த சம்பவம். அப்போது பிரபல வித்வானாகிய வயலின் நாராயணய்யர், திவான் சர் சி. பி. ராமசாமி அய்யர் முன்னிலையில் நடைபெறும் தமது மகனின் வயலின் நிகழ்ச்சிக்கு என்னையும், காலம் சென்ற முத்தையா பாகவதரையும் அழைத்திருந்தார். அன்று பிரமாதமாகக் கச்சேரி செய்தது இன்று பிரபலமாக விளங்கும் வயலின் டி. என். கிருஷ்ணன்தான்.

தொடர்ந்து அவன் தந்தை, அவன் மேலும் இத்துறையில் பிரகாசிக்க என்னை அவனுக்குக் குருவாக்கி என்னிடம் அழைத்துக் கொண்டு வந்தார். நான் அவரிடம், 'இனி இவனைப் பற்றி நீங்கள் கவலைப்படக் கூடாது. இவன் என்னுடனேயே என் வீட்டில் இருக்கட்டும். பிற்காலத்தில் பெரிய வித்வானான பிறகு அவனைப் பற்றி நீங்கள் பெருமை கொள்ளுங்கள்' என்றேன். இதற்கு முற்றிலும் சம்மதம் அளித்தவர், அவ்வாறே என் பொறுப்பில் விட்டுச் சென்று விட்டார்.

என் கச்சேரிகளில் அதிகமாக அவனை வாசிக்க வைத்துப் பயிற்சி அளித்தேன். தவிர பெரிய வித்வான்களான அரியக்குடி, முசிரியோடும் பக்க வாத்தியமாக அவனை வாசிக்கச் செய்தேன்.

அவன் என் வீட்டிலேயே வளர்ந்து, என்னோடு நன்கு பழகி, நன்றாகப் பயிற்சியும் செய்து வந்தான்.

இன்று பெரிய அளவில் அவன் பிரகாசிப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடையாமல் இருப்பேனா?



டி. என். கிருஷ்ணன்



எஸ். பாலசந்தர்

வீணை எஸ். பாலசந்தர் வளரும் மிருதங்கக் கலைஞர் திரு சியாம்சுந்தர் பற்றி:

மிருதங்க வித்வான் காரைக்குடி மணியின் சிஷ்யர்களுள் ஒருவன் இளைஞன் சியாம்சுந்தர். ஒருமுறை வேறு ஒருவர் வீணைக்கச்சேரிக்கு நான் தலைமை தாங்கப் போயிருந்த போது அவருக்கு இவன் பக்க வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தான். மிகவும் நன்றாக வாசித்தான். அதை ரசித்த நான் இவனுக்கு மேலும் சந்தர்ப்பம் அளிக்க முன் வந்தேன். என்னுடைய இசை நிகழ்ச்சிக்கு இவனை வாசிக்க வைத்தேன். இவன் மிருதங்கம் வாசிப்பதையே தொழிலாகக்கொண்டவன் அல்ல. அலுவலகத்தில் வேலை செய்கிறான். இப்படிப்பட்டவர்கள் ரொம்பவும் புத்திசாலிகளாக இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

ஆயினும் இவனைப் போன்ற இளம் வித்வான்கள் வேறு அலுவலில் ஈடுபடாது, முற்றிலும் மிருதங்கம் வாசிப்பதையே தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தினால்தான் ஒரு மணி, சிவராமன், மூர்த்தி, ரகு, துரை போல் மேலும் பிரகாசிக்க முடியும் என்பது என் கருத்து. இதற்கு அனுசரணையாகக் கலை ஸ்தாபனங்களும் இவர்களுக்கு ஊக்கம் அளிக்கவேண்டும்.



சியாம் சுந்தர்



லால்குடி ஜெயராமன்



சேஷ கோபாலன்

லால்குடி ஜெயராமன், சேஷ கோபாலன் பற்றிச் சொல்கிறார்:

1969ம் ஆண்டு, என் அருமை நண்பர் கோடூர் ராஜ கோபாலசாஸ்திரியிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் வருடா வருடம் கோயமுத்தூரில் ஸ்ரீ ராமநவமி உற்சவம் சுப்பராவ் நடத்துவதால் அதில் நான் வாசிக்க வேண்டும் என்றும், அன்றே மாலை மூன்று மணி அளவில் ஜூனியர் கச்சேரியில் ஒரு புது இளைஞன் பாட்டைக் கேட்டு, அவனுக்கு ஆதரவு தர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டிருந்தார். நான் அந்தக் கச்சேரியை மிகவும் ரசித்தேன். அதோடு அவனைப் பாராட்டி, ''நீ நன்றாகச் சாதகம் செய். உனக்கு நல்ல எதிர்காலம் உண்டு'' என்று வாழ்த்தினேன். இதைக் கேட்ட இளைஞன் மிகவும் சந்தோஷப்பட்டான். 1970ல் சென்னையில் கிருஷ்ணகான சபா செயலாளர் யக்ஞராமனிடம் அவனுக்காகச் சிபாரிசு செய்தேன். நானும் அவனோடு வாசிப்பதாகச் சொன்னவுடன் செயலாளர் சம்மதித்தார். இளைஞன் உற்சாகமாகப் பாடக் கச்சேரி பிரமாதமாய் அமைந்தது.

மேலும் அகாதமியினரிடம் சிபாரிசு செய்து, இளைஞனைச் சங்கீத சீஸனில் பாடவைத்தேன்.

ஆச்சரியப்படும் வேகத்தில் நினைத்த பிடிகளை இயற்கையாக வெளியிடக் கூடிய சாரீர அமைப்பு என்னை மிகவும் கவர்ந்தது.

இப்போது பல வருடங்கள் ஆகி, இன்று உயர்ந்த நிலையில் சேஷகோபாலன் உள்ளதைப் பார்க்கும்போது நான் ரொம்பவும் மகிழ்ச்சியும், பெருமையும் அடைகிறேன்.

---

வேலூர் ராமபத்ரன் வளரும் புல்லாங்குழல் கலைஞர் சுரேஷ் பற்றி:

1975ம் ஆண்டு பிப்ரவரி மாதம் நான் சுரேஷுக்கு வாசிக்க நேர்ந்தது. குழலில் காற்று அழுத்தத்துடன் ராகமும், சரியான தாளக் கட்டுடன் கீர்த்தனைகளும் வாசிக்க அபார ஆற்றல் வேண்டும். இந்தத் தன்மைகள் சுரேஷிடம் இருந்தன. கச்சேரி களை கட்டியது. நான் பிரமித்துப் போனேன். தோடி கீர்த்தனை ஒன்றில் அவன் ஸ்வரம் வாசித்தபோது நான் ஸ்வரக் கோவையைப் பெரிதும் பாராட்டினேன். அப்போதே இந்தக் கலைஞன் நன்கு முன்னுக்கு வருவான் என்பது தெரிந்தது.

இவன் கர்நாடகத்தைச் சேர்ந்தவன். அதிகம் பேசமாட்டான். சுட்டிப் பயல். எதையும் ஆழ்ந்து கவனிப்பான்.

'சுரேஷ் கச்சேரியை ஏற்பாடு செய்யுங்கள்' என்று கல்கத்தா ரசிக ரஞ்சனி சபையின் நிர்வாகிகளை நானும் லால்குடி ஜெயராமனும் வற்புறுத்தினோம். முதலில் மறுத்தவர்கள், பின்பு ஒப்புக் கொண்டார்கள். கச்சேரி நான்கு மணி நேரம் வெகு விமரிசையாக நடந்தது. அதில் கல்யாணி, தோடி, ராகங்களில் சபையோரைப் பெரிதும் மகிழ்வித்தான் சுரேஷ்.

சமீபத்தில் லால்குடியும், நானும் பக்க வாத்தியம் வாசிக்க அவனுடைய எல். பி. ரெகார்டு வெளியிடப்பட்டுள்ளது.

இப்போது பல நகரங்களில் அவன் கச்சேரி செய்வதைப் பற்றி அறிய எனக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறது. அவன் மேலும் புகழ் பெற நான் வாழ்த்துகிறேன்.

பேட்டி: ''சிக்கி''



வேலூர் ராமபத்ரன்

சுரேஷ்





காங்கிரஸ் (ஐ)




ஏதேது! நம்மையே மிஞ்சிடுவார் போலிருக்கே!




இவங்களைப் போல ரொம்ப வயசாயிட்டாக்க, சன்னியாசம் வாங்கிக்க மனசு வருமோ, என்னமோ, இளமையா இருக்கச்சேயே போயிடறேன்!
சி.எஸ்




உடன்பிறப்பே! இதோ, இங்கே பணபலம்!
தொண்டரே! இங்கே சொம்பலம்!




அது சரி... வாக்காளர் மனம் எங்கேயா?
உடன் பிறப்பு
தொண்டர்




# கல்கி

1979 டிசம்பர் 16
சித்தார்த்தி மார்கழி 1
மலர்: 38 இதழ்: 20




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# கமான், மிஸ்டர் ஸ்டிரேஸி!

**Come on Mister Stracy! Don't take us for a ride!**

குமுதத்தில் நீங்கள் அளித்திருக்கும் பேட்டி படித்தோம். இந்த ஆண்டின் சிறந்த நகைச்சுவைக் கட்டுரையாக விளங்கியது. கங்கிராட்ஸ்!

சென்னையில் கொள்ளை, கொலை, பிக்பாக்கெட், சங்கிலி அறுத்தல் முதலியன அதிகமாகி வருகிறதே என்றால் பளிச்சென்று அதற்குப் பதில் கூறாமல் நன்றாகப் பூசி மெழுகி யிருக்கிறீர்கள். ஒரு காலத்தில் திறமைக்குப் பேர் பெற்றதாக இருந்தது தமிழக போலீஸ். இன்று அந்த நற் பெயரை அது இழந்து நிற்கிறது. அதுவும் சமீப காலத்தில் சென்னை மக்கள் போலீஸிடம் துரிதமாக நம்பிக்கை இழந்து வருகின்றனர். இதுதான் உண்மை. இதை ஒப்புக் கொள்ளுங்கள். அதை விட்டு விட்டு 'மக்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; அவர்களுக்கு நகை ஆசை எதற்கு? ஏன் வீட்டைத் திறந்து போடுகிறார்கள்?' என்றெல்லாம் திருப்பிக் கேட்கிறீர்களே! இது தோசை அல்ல திருப்பிப் போட, இட்டிலி!

மக்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டாம் என்று நாம் சொல்லவில்லை. நகை ஆசை நல்லது என்றும் நாம் கூறவில்லை. ஆனால் மக்கள் அஜாக்கிரதையாக இருக்கலாம் என்பதை உணர்ந்து அதற்கு ஏற்பச் செயல் படுவதுதான் போலீஸாரின் கடமை. உங்கள் கடமையைச் சரிவர ஆற்றி விட்டு மக்களுக்கு உபதேசமும் செய்தால் ஏற்பார்கள். ஆனால் பல கொலை கொள்ளைகளை நடத்திய குற்றவாளிகளைப் பிடிக்கத் திறனின்றி இருக்கும் போலீஸ், மக்கள் மீதே பழி சுமத்தினால் அது நொண்டிக் குதிரை பழமொழியைத்தான் நினைவூட்டும். நகை ஆசை இந்த நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வருகிற ஒன்று. ஸ்டிரேஸி சொன்னதற்காக அது நாளைக்கே மறைந்து விடாது. நம் மக்களுடைய மனதத்துவரீதியான இயல்பான அந்தப் பலவீனங்களைக் கவனத்தில் கொண்டு போலீஸ் இலாக்கா செயல்பட வேண்டும். பாங்கில் வைத்துப் பூட்டவா நகை செய்கிறார்கள்? தாலியைக் கூடவா கழற்றி வைத்து விட முடியும்?

'தேர்தல் வரும்போதும் சட்டமன்ற நிகழ்ச்சிகள் நடக்கும்போதும்தான் கொலை, களவு, பிக்பாக்கெட் அதிகமாகிறது' என்று தாங்கள் கூறுவது ஏற்க முடியவில்லை. கோகுலாஷ்டமியையும் குலாம் காதரையும்தான் நினைவு படுத்துகிறீர்கள். தேர்தலின்போது விசேஷ ரிசர்வ் போலீஸ் படைகளின் உதவியும் நாடப் படுகிறதல்லவா?

சேத்துப்பட்டு கொலை, இந்திரா நகர் கொலை, அண்ணா நகர் கொள்ளை என்று வரிசையாக எவ்வளவோ அடுக்கிக் கொண்டே போகலாம். கடைசியாக நாடோடி வீட்டில் நடந்த அக்கிரமமும் தங்களுக்குத் தெரியும். 'யாருமே கைதாகவில்லையே?' என்றால் 'ஸ்காட்லாண்ட் யார்டிலும்தான் எல்லாக் கொலை, கொள்ளைகளையும் கண்டு பிடிக்கவில்லை' என்று நீங்கள் கூறுவது 'ஓ ஹோ ஹோ' என்று சிரிக்க வைக்கிறது.

அதை விடப் பெரிய ஜோக், 'சேத்துப்பட்டில் போலீஸார் இரு ஜேப்படிக்காரர்களைப் பிடிக்க, அக்கம்பக்கத்திலிருந்தவர்கள் போலீஸை மிரட்டி அவர்களை விடுவித்து அழைத்துப் போய் விட்டனர்' என்று நீங்கள் கூறியிருப்பதுதான். சென்னை போலீஸின் கையாலாகாத்தனத்துக்கு இதைவிட வேறு சான்று என்ன வேண்டும்?

'ஓய்வு பெற்று விலகப் போகிறேன், ஆஸ்திரேலியா செல்கிறேன், திரும்பி வந்து புத்தகம் எழுதப் போகிறேன்' என்றெல்லாம் சொல்கிறீர்கள். ரொம்ப சரி; ஆனால் போலீஸ் சரித்திரம் வேண்டாம்; மர்ம நாவலாக எழுதுங்கள். அதிலாவது குற்றவாளிகளைப் போலீஸார் பிடித்து விடட்டும்!

# கடைசிப் பயணம்!

சந்துரு

அம்மா...!

அவளை நினைத்தாலே தியாகத்தின் திருவுருவமாக என் மனக் கண்ணில் தெரிகிறாள்.

கடந்த காலம் மனத்திரையில் நிழற்படமாக ஓடுகிறது.

எங்களுக்காக அவள் பட்ட துன்பங்கள் எத்தனை! சிந்திய வியர்வைதான் எவ்வளவு!

இரண்டு பெண்களைப் பெற்ற அம்மா முப்பது வயதை எட்டுவதற்குள் எங்கள் அப்பாவையும் அதன் விளைவாகப் பூவையும், பொட்டையும் இழந்தாள். புன்சிரிப்பை மறந்தாள்.

பத்து மாதங்கள் சுமந்த போது நாங்கள் அவள் உடலுக்கு மட்டும்தான் பாரமாக இருந்தோம்.

வயது வந்ததும் அக்கா பாமாவும் நானும் அம்மாவின் தூக்கத்துக்கே விரோதியாக ஆனோம். பூத்துக் குலுங்கிய எங்களது இளமையும் ஆண் துணை அற்ற எங்கள் தனிமையும் அம்மாவை மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டு இருக்கச் செய்தன.

அப்பாவை இழந்ததும் அதுவரை நாங்கள் மட்டும் சாப்பிடச் சமைத்துக் கொண்டிருந்த அம்மா, வாழ்க்கையை நடத்தவே ஜானகிராம ஐயர் வீட்டில் சமையல்காரியாக அமர்ந்தாள். குருவி சேர்ப்பது போல் சேர்த்து எனக்கும் பாமாவுக்கும் கல்யாணம் நடத்தி வைத்தாள்.

கல்யாணத்துக்குப் பின் பாமா கணவனுடன் கல்கத்தா போய்விட்டாள். காலைச் சுற்றிய பாம்பாக நான் உள்ளூரிலேயே வாழ்க்கைப் பட்டேன்.

'தாம் பாதி, அடுத்தவர் பாதி' என்பது என் கணவர் விஷயத்தில் நூற்றுக்கு நூறு உண்மை. அவர் கல்யாண தினத்தன்றே என் அம்மாவை ஒரு விரோதியைப் போல் நினைத்தது பின்னால்தான் தெரிந்தது.

அரசாங்க உத்தியோகம் அவருக்கு. அதிக மானகோபமும், குறைவான சம்பளமும் கொண்ட அவருக்கும் எனக்கும் மூன்று குழந்தைகள் பிறந்தன.

மேலும்பிள்ளை பிறப்பதை ஆபரேஷன் மூலம் நிறுத்தினேன். வளர்ந்து வரும் வறுமையைப் போக்க ஆபரேஷன் ஏதும் கிடையாதே!

மாதம் முழுவதும் 'அடுத்த முதல் தேதி'யை எதிர்பார்த்தே கழிப்போம். அது வந்தவுடன் 'ஏன்தான் முதல் தேதி வருகிறதோ?' என்று சலித்துக் கொள்வோம்.

தன்னால் முடிந்த அளவுக்குப் பணத்தாலும் சரீரத்தாலும் எனக்கு உதவி செய்யும் அம்மா எவ்வளவு வற்புறுத்தினாலும் என் வீட்டில் ஒருவேளை கூட சாப்பிட மாட்டாள்.

''ஜமுனா! நான் சாப்பிடும் சாதம் இருந்தால் குழந்தைகள் இரண்டு வேளை தாராளமாகச் சாப்பிடலாம்!'' — என்று சொல்வாள்?

ஒருவேளை கூட எனக்குப் பாரமாக இருக்கக் கூடாது என்பது அவள் எண்ணம்.

என் கணவருக்கு என் மேல் எந்த விஷயத்துக்காகக் கோபம் வந்தாலும், கடைசியாக ''என்ன இருந்தாலும் நீ ஒரு விதவையின் பெண்தானே!'' — என்று ஒரு கல்லால் இரண்டு மாங்காய்களை அடித்து முடிப்பார்.

என்னை என்ன வேண்டுமானாலும், சொல்லட்டும் — கழுத்தை நீட்டிய பாவம் — ஆனால் அதற்கு அம்மா என்ன செய்வாள்?

ஒருநாள் எனக்கு அடக்க முடியாத கோபம் வந்து விட்டது. ''என் அம்மா என்னைப் பெற்ற பிறகு தான் விதவையானாள். விதவையான பிறகு நான் அவளுக்குப் பிறக்கவில்லை.''

எதற்கும் வாயைத் திறக்காத நான் இப்படிப் பேசியது என் கணவருக்கு அதிர்ச்சியாக இருந்திருக்க வேண்டும்.

''ரொம்ப உத்தமிதான் போ உங்க அம்மா!''—அவர் பேச்சில் ஏளனம் வழிந்தது.

கண்ணீர் என் கண்களுக்குத் திரையிட்டுத் தடுத்தது. ''நமக்கு ஒரு நல்லது நடக்கும் என்றால் அம்மா தன் உயிரையும் கொடுக்கத் தயங்க மாட்டாள்.''





## வெற்றுக் குழாய்!

பிரபல நாதஸ்வர வித்வான், திருவாரூரில் வாசித்துவிட்டு, பக்கத்து ஊருக்கு வந்தார். திருவாரூர் வாசிப்பு பிரமாதம். அடுத்த ஊரில் அப்படி இல்லை.

இராமசாமி சொன்னார்: ''அடைத்து வந்ததை யெல்லாம் இவரு திருவாரூரிலேயே ஊதிட்டு வெறுங்குழாயை இங்கே கொணாந்துட்டாரு.''

—இரா. சுராஜ் கேள்விப்பட்டது

---

''இருக்கும் போது ஒன்றுக்கும் உதவாத உன் அம்மா, உயிரைக் கொடுத்தால் என்ன கிடைக்கும்?'' அலட்சியமாகச் சிரித்தார்.

இது நடந்து சில நாட்களில அவரை மாயவரத்துக்கு மாற்றி விட்டார்கள். எங்களைக் கண்ணீருடன் வழியனுப்பி வைத்தாள் அம்மா. அவளைப் பிரிந்து செல்ல வேண்டும் என்ற துக்கம் எல்லா 'லக்கேஜு'க் காட்டிலும் அதிகமாகக் கனத்தது.

இவர் அரசாங்க உத்தியோகத்தில் இருப்பதால் மூன்று வருடங்களுக்கொரு முறை முதல் வகுப்பில் இந்தியாவில் எங்கு வேண்டுமானாலும் நாங்கள் ரயிலில் போகலாம்.

அந்தச் சமயத்தில் பதினைந்து நாட்கள் ஆபீஸில் லீவு எடுக்க வேண்டும். இந்தச் சலுகைக்கு 'லீவு டிராவல் சலுகை' என்று பெயர்.

எனக்குத் தெரிந்து இதுபோல் இரண்டு முறை இவர் பணம் வாங்கி விட்டார். அது வரைக்கும் நாங்கள் ரயிலே ஏறியது கிடையாது. ஆனால் எங்கெங்கோ போய் வந்ததன் அடையாளமாக யாரையோ பிடித்துப் 'போலி ரசீது'களைத் தயார்செய்து ஆபீஸில் கொடுத்து விடுவார் இவர்.

இப்போது மூன்றாவது முறையாகப் பணம் வாங்கியிருக்கிறார். இந்த முறை பாலாஜியின் — எங்கள் மூத்த பிள்ளை — அரை டிக்கெட்டுக்கும் சேர்த்து ஆயிரம் ரூபாய் கிடைத்திருக்கிறதாம்.

மாயவரத்துக்கு வந்து விளையாட்டுப் போல் இரண்டு மாதம் ஓடி விட்டது.

வீட்டு வேலையை முடித்து விட்டு யோசனையில் ஆழ்ந்திருக்கிறேன்.

''சார் தந்தி!'' வாசலில் குரல்கேட்டு என் கற்பனை கலைந்து விட்டது.

கையெழுத்துப் போட்டுத் தந்தியை வாங்கியவள் அரக்கப் பரக்கப் பிரித்தேன்.

'அம்மா எங்களை விட்டுப் போய் விட்டாளாம்!' ஜானகிராம ஐயர் சென்னையிலிருந்து தந்தி கொடுத்திருந்தார்.

என் தெய்வத்தை விட்டுவிட்டு நான் இந்த ஊருக்கு வந்தேன். அவள் இந்த உலகத்தை விட்டே போய் விட்டாள்.

அம்மாவின் கடைசிப் பயணத்தில் கலந்து கொள்ளக் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு சென்னையை நோக்கி விரைந்தோம். இரண்டு வாரங்கள் சென்னையில் ஜானகிராம ஐயர் வீட்டில் இருந்துவிட்டு சமக் கடன்கள் முடிந்தவுடன் மீண்டும் ஊர் திரும்பினோம்.

இரண்டு மாதங்கள் ஓடி விட்டன. இரவு மணி பதினொன்று. ஊரே தூங்கியிருக்க வேண்டும் — என்னைத் தவிர! எங்கும் அமைதி.

''இன்னும் நீ தூங்கவில்லையா?''

''இல்லே....''

''அம்மாவையே நினைத்துக் கொண்டிருக்கிறது போலிருக்கிறது குழந்தை!''

என்னையுமறியாமல் விசும்புகிறேன். என் கணவரின் கேள்வி என் துக்கத்தை அதிகரிக்கச் செய்து விட்டது.

''ஜமுனா! உன்னிடம் ஒரு சந்தோஷமான செய்தியைச் சொல்ல வேண்டும். எங்கள் ஆபீஸில் ஏகக் கலாட்டா. மூன்று பேர் என்னைப் போலவே வெளி ஊருக்குப் போகாமலேயே போலி ரசீதுகள் கொடுத்ததனால் நன்றாக மாட்டிக் கொண்டு விட்டனர். இப்போது அவர்களின் வேலைக்கே ஆபத்து வரும் போலிருக்கிறது.''

''ஆமாம்.... நீங்கள்....?'' பதற்றத்துடன் கேட்டேன்.

''அவசரப்படாதே! சொல்கிறேன். இது போல் பலர் செய்வது அரசாங்கத்துக்குத் தெரிய வந்து விட்டது. சரியான சமயம் பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். பணம் வாங்கியவர்கள் தங்களுடைய பிள்ளைகள், மனைவி எல்லாருக்கும் சேர்த்துத்தான் வாங்கியிருக்கிறார்கள். இரண்டு பேர்களின் பிள்ளைகள் பள்ளிக்கூட 'அட்டெண்டென்ஸ் ரிஜிஸ்டர்'படி அந்த நாட்களில் பள்ளிக்குப் போயிருக்கிறார்கள். ஒருவர் மனைவி அவளுடைய ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்திருக்கிறாள். அவற்றை வைத்து அவர்களை மடக்கி விட்டார்கள்....''

''நீங்களும் பாலாஜிக்குச் சேர்த்துத்தானே பணம் வாங்கினீர்கள்?''

''பாலாஜியின் பள்ளியிலும் விசாரித்திருக்கிறார்கள். ஆனால் அந்த நாட்களில் நல்லவேளையாக அவன் பள்ளிக்கே போகவில்லை... ஏன் தெரியுமா? ''

''அந்தச் சமயத்தில்தான் அம்மாவின் காரியங்களுக்காகச் சென்னைக்குப் போகும்படி நேர்ந்து விட்டதே!''

''அதனால் ரசீதுகளும் இந்த முறை அசலாகவே கொடுத்து விட்டேன். போலி இல்லை.''

அவரே தொடர்ந்தார்.

''அன்று நீ சொன்னது பலித்து விட்டது. அம்மா இறக்கும் போது கூட நமக்கு மிகப் பெரிய நன்மையைச் செய்து விட்டாள்.''

அவருக்கு நாத் தழுதழுத்தது.

இவ்வளவு நாட்கள் கழித்து இப்பொழுதாவது அம்மாவைப் பற்றிப் புரிந்து கொண்டாரே! என் மனம் நிறைந்திருந்தது.

# பூத்

'கமல்'














### அத்தியாயம் 20

## சித்தப்பா ஸில்வர்

**எ**ப்பொழுது வீசும் எப்பொழுது அடங்கும் என்று திட்டமாகச் சொல்ல முடியாதபடி திடீரென்று தோன்றித் திடீரென்று அடங்கி விடும் அரபிக் கடலின் புயல் வெளியே வெகு வேகமாக மந்தப்பட்டுக் கொண்டிருந்தாலும், ஸில்வரின் வருகையாலும் மித்ரபேதப் பேச்சினாலும் அனந்தின் இதயத்தில் எழுந்த புயல் மிக வேகமாகவே வீசத் தொடங்கியது. அவன் மன அலைகள் ஸில்வரின் கபடத்தினால், கபடம் விளைவித்த புது நிலையால் பெரிதாக எழுந்து அனந்தின் சித்தத்தைப் புரட்டியது நூற்றுக்கு நூறு உண்மையென்றாலும், அந்த உண்மை அவன் முகத்தில் இம்மிகூடத் தெரியவில்லை. முதலில் முகத்தில் விரிந்த வியப்பு கலந்த சினம் திடீரென்று மறைந்து அவன் முகத்தை உணர்ச்சியற்ற கல்லாக்கி விட்டது. வெளியே புயல் பெரிதும் அடங்கி விட்டதன் விளைவாக கப்பலின் ஆட்டமும் அடங்கிவிட்டதால் அகற்றி வைத்திருந்த கால்களை ஒன்று சேர்த்துக் கொண்டு திடமாக நின்ற அனந்த் இரண்டடி பின்னுக்கு நகர்ந்து மேஜையின் மீது சாய்ந்த வண்ணம் கதவுக்கருகே நின்ற ஸில்வரை நோக்கினான் பல விநாடிகள். நோக்கினானே தவிர உதட்டை அசைக்கவில்லை, சொற்களை உதிர்க்கவுமில்லை. ஆனால் அவன் கண்கள் ஏதோ பேசியிருக்க வேண்டும். ஆகவே ஸில்வரே பேச முற்பட்டு ''அனந்த்! நான் வெளிப்படையாகப் பேசியிருக்கக் கூடாது. ஐ ஆம் ஸாரி. மன்னித்து விடு'' என்று கூறினான்.

ஸில்வரின் பேச்சு மீண்டும் தனக்கும் ராணிக்கும் ஏற்கனவே ஏற்பட்டு விட்ட பிளவை இன்னும் அதிகப்படுத்துவதை உணர்ந்த பின்பும் அனந்த் பேசவில்லை. பின்புறமாகக் கைகளைச் செலுத்தி வலது கையால் மேஜையின் மீதிருந்த காகிதப் படத்தை மடித்துக் கசக்கி ஒரு கையில் வைத்து மூடிக் கொண்டான். பிறகு அதை ராணியிடம் நீட்ட அவள் அதை வாங்கித் தனது இடையில் சொருகி மறைத்துக் கொண்டாள். ஸில்வர் கதவைத் திறந்து கொண்டு வந்தபோது அவனுக்கு முதுகைக் காட்டி மேஜையை மறைத்து ராணிக்கு எதிராக அனந்த் நின்று கொண்டிருந்தாலும், ஸில்வர் வருகையை உணர்ந்த பின்பு அவன் சரேலெனத் திரும்பி மேஜை மீதிருந்த காகிதத்தையும் ராணியையும் மறைத்து விட்டதாலும், அனந்தின் கைகள் காகிதத்தைச் சுருட்டியதையோ ராணி அதை இடையில் பத்திரப்படுத்தி விட்டதையோ ஸில்வர் கவனிக்கவில்லைதான். ஆனால் அனந்தின் சிந்தனை எங்கோ ஓடுகிறதென்பதையும் அதனால் தனக்கு ஆபத்து இருக்கிறதென்பதையும் புரிந்து கொண்டதால் கெஞ்சினான் ஸில்வர், ''அனந்த்! நான் அனாவசியமாக வரவில்லை. உன் மீது வேவுபார்ப்பதும் என் எண்ணமல்ல. இங்கலண்ட் உன்னிடம் ஒரு விஷயம் சொல்லச் சொன்னான். அதற்காக வந்தேன்'' என்று.

இதற்கும் பதில் சொல்லவில்லை அனந்த். அவனுக்குப் பின்னால் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த ராணி மட்டும் ஸில்வர்மேலும் என்னசொல்லுகிறானென்பதை அறியக் காதைத் தீட்டிக் கொண்டாள். இந்திரஜித் அனந்த் தன் மீது காட்டிய காதலெல்லாம் வெறும் நாடகம் என்று ஸில்வர் சொன்னதை அவள் நம்பவில்லை. ராணி மற்றப் பெண்களைப் போல் சாதாரண பெண்ணாயிருந்தால் ஸில்வரின் வார்த்தைகள் அவள் மனத்தைச் சுக்கு நூறாக உடைத்திருக்கும். ஆனால் ராணியின் இரும்பு மனம் ஆரம்பத்தில், ஸில்வர் திடீரென வீசிய வெடியில் சில விநாடிகள் திகைத்தாலும், சட்டென்று திரும்பிச் சுய நிலை அடைந்தது. சுயநிலை என்றால் பழைய

---

சபாவுக்கு வெளியே: (குழந்தையிடம்)
''அழுது அட்டகாசம் பண்ணினியோ, திரும்பவும் உன்னை கூட்டிக்கிண்டு போயிடுவேன்!''
—ஜி. நடராஜன்



நிலையை அல்ல, காமத்தால் செயலிழந்த நிலையை அல்ல, இயற்கையாக மனிதர்களை ஊடுருவிப் பார்க்கும், பார்த்து இயந்திரம் போல் இயங்கும் நிட நிலையை அடைந்தது.

ஆகவே ராணியின் குரல் அசரீரியைப் போல் வில்வரை நோக்கி ஒலித்தது. ''வில்வர்! உங்கள் ஒப்பந்தம் நன்றாயிருக்கிறது. ஆனால் பயனளிக்குமென்று நீங்கள் நினைப்பது தான் முட்டாள்தனம். ராணியை நீங்கள் இருவருமே புரிந்து கொள்ளவில்லை'' என்று கூறினாள்.

ராணியின் சொற்களைக் கேட்ட வில்வர், அனந்த் இருவருமே திகைத்தார்கள். ராணி மேலும் சொன்னாள்: ''வில்வர்! இந்த அனந்தை நான் பார்த்ததும் மயங்கி விடுவே னென்று நீ நினைத்திருந்தால், மயங்கியதாகப் பாசாங்கு செய்ததை உண்மையென்று உன் சகோதரக் கொள்ளைக்காரரான இவர் நம்பி யிருந்தால், ராணியை நீங்கள் மிகச் சொற்ப மாக எடை போட்டிருக்க வேண்டும். ஐ ஆம் நாட் எ பூல் லைக் யூ ஆர் ஹிம்'' என்று சொன்ன ராணி ''அனந்த்! என்னை மறைக்கா தீர்கள். விலகி நில்லுங்கள். அந்த நொண் டியை நான் பார்க்க வேண்டும்'' என்றும் அறிவித்தாள். அந்த அறிவிப்பு உத்தரவைப் போல் ஒலித்தது.

அனந்த் மேஜையின் முன்னிருந்து சிலை போல் மெதுவாக நகர்ந்தான். அடுத்த விநாடி ராணியும் வில்வரும் ஒருவரையொரு வர் நோக்கினார்கள். எதற்கும் குழம்பாத வில் வரே குழம்பி நின்றான். ராணியின் முகத்தில் எந்தவித வெறுப்போ, சினமோ, குழப்பமோ இல்லாதிருந்ததையும் அவள் இதழ்களில் ஒரு புன்முறுவல் மட்டும் தவழ்ந்து கிடந்த தையும் கண்ட வில்வர், தன்னைவிட அனந் தைவிட மிக அபாயமான ஒரு பெண்ணிடம் தான் சிக்கிவிட்டதை உணர்ந்தான். ''ராணி! நான் உளறி விட்டதற்கு மன்னிக்க வேண் டும்'' என்று கேட்டுத் தனது பழைய கதையை ஊர்ஜிதப்படுத்தினான்.

அடுத்து ராணியின் இதழ்களில் புன்முறுவல் மிக அதிகமாக விரிந்தது. வில்வரின் சங்கட மும், சங்கடத்திலும் விஷமத்தை ஊர்ஜிதம் செய்ய அவன் செய்த முயற்சியும் அவளுக்குத் தெள்ளெனப் புரிந்தது. அதனால் அவள் முகமும் மலர்ந்தது. பார்வை குழைந்தது. குரலும் மிக மதுரமாகக் குழைய ராணி பேசினாள். ''வில்வர்! மை டியர் வில்வர்!'' என்று மிக மதுரமாக அழைத்தாள்.

வில்வர் முகத்தில் விவரிக்க இயலாத சாயையொன்று படர்ந்து மறைந்தது. ''ராணி!...'' என்று ஏதோ பேச ஆரம்பித் தான் வில்வர். அதே சமயத்தில் தோளில் உட்கார்ந்து, அறையிலிருந்த அனந்தையும் ராணியையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்த அசுரக் கிளியைத் தனது வலது கையால் தடவிக் கொடுத்தான்.

வில்வரின் செய்கை ஒவ்வொன்றையும் ராணியின் கண்கள் கவனித்தன. இதழ்கள் குவிந்தன ஒருமுறை. பிறகு விரிந்து ''நோ வில்வர், நாட் தட் வே (இல்லை வில்வர். முறை அதுவல்ல)'' என்று சொற்களை அன வுடன் உதிர்த்தன.

''என்ன ராணி?'' என்று வில்வர் ஆங்கி லத்தை அறவே துறந்து மராட்டியில் பேசி னான்.

''ராணியென்று அழைக்காதே!'' இன்ப மாகச் சொன்னாள் ராணி.

''என்னவென்று அழைப்பது?''

''நான் கிளியல்லவா?''

''எஸ். யூ ஆர் ப்யூடிபுல். ஆஸ் ப்யூடிபுல் ஆஸ் மை ப்ளிண்ட், ஐ மீன் காப்டன் ப்ளிண்ட். (ஆம். நீ மிக அழகி, என் ப்ளின் டைப் போல், காப்டன் ப்ளிண்டைப் போல் மிக அழகி)'' என்றான் வில்வர், சுபாவம் போகாததால் தாய் மொழிக்கும் திரும்பி.

''கிளியின் பெயர் காப்டன் ப்ளிண்டா?''

''ஆம்.''

''அதை எப்படி அழைப்பாய்?''

''மை டியர் ப்ளிண்ட் என்று.''

''நானும் உன் கிளியைப் போல் இன்னொரு கிளிதானே?''

''ஆம்''

''ஆகவே எப்படி அழைக்க வேண்டும்?''

இந்தக் கேள்வியைக் காதில் வாங்கிய வில் வர் பெரிதாக நகைத்தான். ''மை டியர்! மை டியர் கேர்ல்'' என்று கூவினான் நகைப் பின் ஊடே.

ராணி நாற்காலியில் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்தாள். ''தட் ஈஸ் பெட்டர் (இது



பரவாயில்லை)'' என்று சிலாகித்தாள் வில் வரை. மேலும் அழைத்தாள் ''வில்வர்!'' என்று.

''வாட் மை டியர்?'' என்றான் வில்வர் குழப்பத்துடன்.

''உனக்கும் என் தந்தைக்கும் வயது அதிக வித்தியாசமில்லை. நீ என் சித்தப்பாவாயிருக் கலாம்'' என்று குழைந்தாள் ராணி.

''அதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண் டும்'' என்றான் வில்வர்.

''கொடுத்து வைத்து விட்டீர்கள் அங்கிள்'' என்று ராணி மேலும் குழைந்து சொற்களை உதிர்த்தாள்.

''அங்கிள்! அங்கிள்! அங்கிள் டு ராணி! வெரிகுட்! வெரிகுட்!'' என்றான் வில்வர்.

இப்படி அவன் குதூகலித்தானே தவிர உள்ளூற விவரிக்க முடியாத சந்தேகமும் தலைகாட்டியது. திடீரென ராணி காட்டிய

அன்பு அவனால் நம்பத் தக்கதாக இல்லை. அதனால் சிறிது சிந்தனையில் இறங்கினான். அந்தச் சமயத்தில் ராணி, ''அங்கிள் ஸில்வர்! அந்தக் கிளியை இங்கு கொண்டு வா'' என்று கேட்டுத் தனது இடது கையையும் நீட்டினாள் மேஜைக்குக் குறுக்கே.

ஸில்வர் அவளை உற்று நோக்கினான். கிளியைத் தடவிய தனது வலது கையை அவன் எடுக்காமல் அதன்மீதே வைத்திருந்தான். ''இது நல்ல கிளியல்ல. பொல்லாதது'' என்று கூறினான் சந்தேகம் தொனித்த குரலில்.

''சித்தப்பா! உன் பெண்ணை அது என்ன செய்து விடும்? உனக்கு அடங்காத கிளியா அது?'' என்று வினவினாள் ராணி.

அவள் எதற்காகக் கிளியைக் கேட்கிறாள் என்பது புரியாததால் சிறிது தயங்கினான். பிறகு தனது கைத்தடியைப் பக்கத்தில் தாங்கிக் கொண்டு மரத் தரையில் டக்டக் என்று ஒலிக்க நடந்து ராணியின் மேஜையை அணுகினான். கிளியை அவளிடம் கொடுக்கவில்லை அவன். ''மை டியர் கேர்ல்! இந்தக் கிளியைத் தொடாதே. இது உனக்குக் கேடு விளைவிக்கும். மிகப் பொல்லாதது'' என்று மற்றுமொரு முறை எச்சரித்தான்.

ராணி அதற்கு மசியவில்லை. அவன் தோளிலிருந்த கிளியை வலுக்கட்டாயமாகத் தனது இடது கையில் பற்றிக் கொண்டாள். அதைத் தடுக்க முயன்ற ஸில்வரை நோக்கி நகைத்தாள். ''சித்தப்பா! உங்களுக்கு உங்கள் கிளியைப் புரிந்து கொள்ள முடியவில்லை. என்ன சாதுவாயிருக்கிறது பாருங்கள்?'' என்று கூறினாள். அவள் சொற்களில் நகைப்பைத் தொடர்ந்த இகழ்ச்சி தாண்டவமாடியது.

ஸில்வர் கண்களில் அச்சம் துளிர்த்தது. கிளியை ராணி மிக அழுத்திப் பிடித்திருந்ததையும் அவள் விரல்களில் இரண்டு அதன் கழுத்தை நெரிக்க முற்பட்டவை போல் அழுத்தியிருந்ததையும் கவனித்தான். ஆகையால் நிதானமிழந்து ''ராணி! அதைக் கொல்லாதே. அதைப்போல் வேறு கிளி உலகத்தில் கிடையாது'' என்று கெஞ்சினான்.

''இதை நான் ஏன் கொல்ல வேண்டும் சித்தப்பா? நான் என்ன ராட்சஸியா?'' என்று கேட்டாள் ராணி.

''இல்லை. நீ மிகவும் நல்லவள். கிளியை



என்னிடம் கொடுத்துவிடு. எனக்கு அது ஒன்று தான் துணை'' என்று மன்றாடினான் வில்வர்.

ராணி மசியவில்லை. ''இதை நான் வைத்துக் கொள்ளப் போகிறேன். நாங்கள் இருவருமே உனக்குத் துணை. அங்கிள்! ஒரு கிளிக்கு இரண்டு கிளிகள் இருந்தால் உனக்கு நல்லதல்லவா?'' என்றாள்.

வில்வர் நிதானம் இழந்தான். ''ராணி! விளையாடாதே என்னிடம். கிளியைக் கொடுத்து விடு'' என்று கூறிக்கொண்டே அதை அவளிடமிருந்து பறிக்கக் கையைக் கொண்டு போனான்.

ராணி வில்வரைப் பரிதாபத்துடன் நோக்கினாள். ''வில்வர்! உன்னைப் புத்திசாலி என்று நினைத்தேன்'' என்றாள். அவள் பேச்சும் குரல் ஒலியும் மாறி விட்டதைக் கவனித்தான் வில்வர். சித்தப்பா உறவு அவள் பேச்சில் அகன்று விட்டதை உணர்ந்தான். சொற்களில் கேலி இருப்பதும் புரிந்தது வில்வருக்கு.

வில்வரின் கண்களில் மிகப் பயங்கரப் பார்வை விரிந்தது. ''ராணி! என்னுடன் விளையாடாதே'' என்று சீறினான்.

ராணி கிளியைச் சிறிது அழுத்திப் பிடித்தாள். அது ''ராணி, ராணி!'' என்று இரண்டு முறை கூவியது.

வில்வர் அடியோடு நிதானத்தை இழந்தான். ராணியின் இடது கையையும் கிளியையும் சேர்த்துப் பிடித்தான். ''யூ ஸ்லட்! ஐ வில் டீச் யூ டு பிஹேவ்'' என்று கூறிய வண்ணம் அவள் கையை நெரித்தான் வலுவாக.

ராணியின் கை வலித்தாலும், எலும்புகள் முறியும்படி வில்வர் அவளைப் பிடித்தாலும் அவள் கிளியை விடவில்லை. ''வில்வர்! விடு கையை!'' என்று மட்டும் கூறினாள்.

''உன் கையை முறித்துவிட்டு விடுவேன். அப்புறம் உன் கை எதற்கும் பயன்படாது. உன் ஆயுள் உள்ளவரை நீ செயலற்ற கையுடன் முடமாகத் திரிவதைக் கண்டு களிக்கப் போகிறேன்'' என்று தைரியமாகப் பேசிப் பலமாக இறுக்கினான் அவள் கையை.

கடல்ராணி முகத்தைச் சிறிதளவும் களிக்கவில்லை. இலேசாக நகைத்தாள் ஒரு முறை. அந்த நகைப்பைத் தொடர்ந்து வில்வரின் முகம் அதிர்ச்சியைக் காட்டியது. கண்களில் அச்சம் நிலவியது. ''நோ நோ. டோண்ட்'' என்று அலறினான் வில்வர்.

அவன் அலறலுக்குக் காரணம் அனந்துக்குப் புரியவில்லை. ராணி அனந்தையும் கவனிக்கவில்லை, வில்வரையும் கவனிக்கவில்லை. அலட்சியமாக நாற்காலியில் உட்கார்ந்த வண்ணம் சிறிது குனிந்து கிளியை முத்தமிட்டாள்! ''வில்வர்! ஐ கிஸ் திஸ் பர்ட். எ கிஸ் கான் பி எ கிஸ் ஆப் லவ், ஆர் எ கிஸ் ஆப் டெத் (வில்வர்! இந்தக் கிளியை நான் முத்தமிடுகிறேன். முத்தம் அன்பு முத்தமாகவும் இருக்கலாம். மரணமுத்தமாகவும் இருக்கலாம்)'' என்ற ராணி ''வில்வர் இரண்டில் எதுவாயிருக்கலாம் என்பதை நீதான் சொல்ல வேண்டும். நீயே அதை முடிவு செய்'' என்றும் சொன்னாள்.

அதைக்கேட்ட வில்வரின் முகத்தில் பெரும் பீதி விரிந்தது. அந்தச் சமயத்தில்தான் காடன் இங்கலண்டும் அந்த அறைக்குள் நுழைந்தான். அறையைச் சுற்றிலும் தனது கண்களை ஓடவிட்டான். ஏதோ விபரீத நிலை அங்கு ஏற்பட்டிருப்பதை உணர்ந்து ''இங்கு என்ன நடக்கிறது?'' என்று வினவினான் அதிகாரத்துடன்.

''ஆஸ்க் அங்கிள்'' என்றாள் ராணி.

''அங்கிள்! ஹூ ஈஸ் அங்கிள்?'' என்று வினவினான் இங்கலண்ட். ஏதும் புரியாமல் ஒரு விநாடி குழம்பவும் செய்தான். அடுத்த விநாடி ''வில்வர்! யூ கம் ஹியர்'' என்று இரைந்தான்.

வில்வர் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. நகர முடியவில்லை. அத்தகைய விபரீத நிலையில் சிக்கியிருந்தான்;

(தொடரும்

## இசை விழாவில்... தம்பு!

**ஜனவரி 6ல் கல்கி 80 ஸ்பெஷல் அதிக பக்கங்கள்**

# கடலுக்குள் ஜூலி

**புஷ்பா தங்கதுரை எழுதும்**



புதிய தொடர்கதை

**கல்கி**



6-1-1980 இதழில் ஆரம்பம்

## செம்பியன் எழுதும் முழு நீள நாவல்

**அமெரிக்காவில் தாணு_**

கார்ட்டூன்கள், அனுபவங்கள்

**புஜ்ஜாய்** வழங்கும் **சித்திரத் தொடர்** (SPY STORY)

**கல்லூரியில் "குவிஸ்"**

கல்கி நடத்தும் "குவிஸ்" நிகழ்ச்சி பற்றிய விவரங்கள்.
வாராவாரம் ஒரு கல்லூரியில் ஒரு மாணவர் ரூ 50/= பரிசு பெறுகிறார்.

**70ம் 80ம்**

79ம் ஆண்டைத் திரும்பிப் பார்த்து, பல துறை அறிஞர்கள் சாதனைகளையும் வேதனைகளையும் குறிப்பிடுவதுடன் எதிர்காலம் பற்றியும் சிந்திக்கிறார்கள்.

மணி மணியான **நான்கு சிறுகதைகள்**

பட விமரிசனங்கள் — ஜௌரீசன்



# யாருக்கு

பிரபல எழுத்தாளர் சுஜாதாவின் 'ஜன்னல் மலர்' என்ற நாவல்தான் காவலாகி இருக்கிறது. மூலக் கதையின் டெம்போவைக் குறைக்கத் தமிழ்ப்பட ஃபார்முலாவான மசாலாக் களைச் சேர்த்துக் கொடுத் திருக்கிறார்கள். மகிழ்ச்சி யான முடிவுக்காகவும் மூலக் கதையின் முடிவை மாற்றி விட்டார்கள். தொடர்கதை யைப் படித்தபோது வாசகர் களின் உள்ளத்தில் உருவாகி இருந்த பாத்திரங்கள் திரைப்படத்தில் முழுமை யாக உருவாக்கப்பட

# பாதை மாறினால்?

கிரிக்கெட் சீஸனுக்கு ஏற்ற கதை: மதன் (சரத் பாபு) பாபு (விக்ரம்) என்ற இரு கிரிக் கெட் வீரர்கள். மதன் மங்கை யரிடையே மன்மதனாக விளங்குகிறான். பிரபுவோ பக்திப் பித்து. புகழும் பொருளும் தரும் விளையாட் டையே துறந்து விட்டுக் காவி உடை அணிந்து கற்பூரத் தட்டோடு வாழுமளவுக்கு அவன் மனம் ஏன் மாறியது என்பதற்கு விளக்க மில்லை. வயசுப் பெண் வீட்டிலிருக்கும்போது கண்டபடியெல்லாம் காதல் விளையாட்டுக் களில் ஈடுபட்டால் அதன் கதி என்னாகும் என்பதை மதனின் செயல்கள் மூலமும் அவன் தங்கை (பருவப்பெண்) பாதை மாறிப் போய்ப் பரிதாப முடிவை அடைவதையும் காட்டிப் படிப்பினையாக்கி இருக்கிறார்கள்.

வட்ட முகத்துக்குப் பொருந்தாத கண் ணாடியை, உன்னி மூக்கில் தொத்த வைத் துக் கொண்டு வெள்ளைப் பாண்ட் சட்டை யுடன் கீச்சுக் குரலில் சளசளவென்று பேசி கிரிக்கெட் பித்தாக வரும் மீரா பாத்திரம் கண்ணாறுவி. பாபுவின் முறைப் பெண்ணாக வரும் கனவுக் கன்னியான சிமாவின் நடிப்பு கௌரவமாகவும் இயல்பாகவும் இயற்கை யாகவும் உள்ளது. சரத்பாபுவின் நடிப்பில் நாளுக்கு நாள் மெருகேறி வருகிறது. சங்கர் கணேஷின் இசை இனிக்கிறது. வசனங்களும் டைரக்ஷனும் கதையோட்டத்துக்கு நிறைய ஸ்கோர்களைக் கொடுத்திருப்பதற்காக துரை யைக் 'கன்கிராட்' பண்ணலாம். பாதை மாறினாலும் தடுமாற்றம் ஏற்படவில்லை.





# ஊமை கனவு கண்டால்..

இடம் மாறும் காதல் கதை. ஆனால் சஸ்பென்ஸ் என்று என்னமோ போட்டுக் குழப்பிக் குட்டிச் சுவராடித்து விடுகிறார்கள் கதையை. முதலிரவன்றே புது மனைவியை விட்டு வெளியேறுகிறான். எங்கே போகிறான்? மர்மம்! கரம் பிடித்த காதலிக்கு இன்ப சுகம்- கொடுக்கவே இல்லை — எந்த இரவிலும். சுவைக்கப்படாத கனியாக சாந்தி துடிக்க, டாக்டர் உஷாவை, அடிக்கடி பகிரங்கமாகவே தனியே இழுத்துக் கொண்டு... மர்மத் தின் உச்சிக்குப் போகும் முடிவோ ரொம்பக் குரூரம் — கணேஷுக்குப் பெரு வியாதியாம் அது தன் மனைவிக்குத் தொத்திக் கொள்ளக் கூடாதென்று உஷாவுடன் — டாக்டரான அவள் அவனுக்கு மருந்து கொடுக்கிறாளா அல்லது...? கோரமான கற்பனை. உஷாவாக வரும் மீராவுக்குப் பொருத்தமான பாத் திரம்.

இந்தக் கோரக் கற்பனைக்கு ஏற்றாற்போல் எல்போர்டு எல்லப்பன் பாத்திரம். நாட்டில் வாழும் குமரிகளெல்லாம் எல்லப்பன் இட்டப் படி தெருக்களில் நின்று அவன் அணைப்புக்காக அலைவார்களானால் 'அட தாழ்ந்த தமிழ் சினிமாவே!' என்று தலையில்தான் அடித்துக் கொள்ளவேண்டும். இப்படிப்பட்ட படங்களை பார்க்கும் போது படம் பார்ப்போர் ஊமை சனமாவதைத் தவிர வேறு மார்க்கமில்லை.

# யார் காவல்?

வில்லை. உதாரணம் எம். ஆர். ராதா காரெக்டர். ஸ்ரீகாந்தும் ஸ்ரீப்பிரியாவும் நன்றாகவே நடித்திருந்தும் கதாசிரியர் சுஜாதாவின் பாத்திரங்களாகத் தோற்றமளிக்கவில்லை. உயிர்த்துடிப்பில்லை. சரத்பாபு இப்படத்தில் 'லவ்வபிள்' வில்லனாக வருகிறார். நடிப்பில் இன்னொரு படி ஏறி இருக்கிறார். ஆனால் அவர் பேசும் தமிழ் சரளமாக இன்னும் எத்தனை நாளாகுமோ?

சோமு (ஸ்ரீகாந்த்) வுக்கு ஜெயிலில் ஒரு தோழனை (தேங்காய்) உண்டாக்கி சிறையில் ஒரு கலாட்டாவும், பிறகு தேங்காய் ஜெயிலை விட்டு வெளியே வந்து சாமியாராக அடிக்கும் கூத்தும் ரொம்பப் போர். ஒரு நல்ல கதையை இதுபோன்ற இடைச் செருகலால் நாசமாக்கி இருக்க வேண்டாம்.

ஒரேமாதிரி சுருளியும் மனோரமாவும் வரும் மற்றொரு கிளைக்கதை. குழந்தை இல்லாத தம்பதிகள். சபல புத்தி ஆண். மழலைக்காக ஏங்கும் பெண் — இவர்களை வைத்து இரு பொருள் வசனம் — எத்தனை படங்களில் இதைப் பார்த்தாயிற்று? ரசிகர்களுக்குக் கசந்து விட்டது. தயாரிப்பாளருக்குச் சலிக்கவில்லையே. படம் ஓட நிறைய நட்சத்திரங்களை ஒப்பந்தம் செய்ய வேண்டும் —அப்படி ஒப்பந்தம் செய்து கொண்ட நட்சத்திரங்களுக்குக் கதையில் இடம் பண்ணித்தர வேண்டும் என்ற இந்த நிலை என்று மாறுமோ அன்றுதான் தரமான தமிழ்ப் படங்களைக் காண முடியும்; 'மல்லியம்' போன்ற வர்களுக்கும் நல்ல பெயர் கிடைக்கும். சுஜாதாவின் கதையைப் படிக்காதிருந்திருந்தால் ஒரு வேளை காவல்' புதுமையாகத் தோன்றி இருக்கலாமோ என்னவோ?



# அன்பே சங்கீதா

ஒரு கதையைத் திரைப்படமாக்க முடிவெடுக்கும் போது தயாரிப்பாளரோ, கதாசிரியரோ ஏதாவது ஒரு குறிக்கோளுடன் செயல்பட வேண்டும். எதை வலியுறுத்த, எந்த ஒரு கருத்தைச் சொல்லப் போகிறோம் என்ற நினைவோடு இருக்க வேண்டும். இந்த நினைவில்லாமல் கதை பண்ணினால் அது உதைக்கும். காரைக்குடி நாராயணனின் சங்கீதாவும் இந்தச் சங்கடத்துக்குள்ளாகி இருக்கிறது. திருமணமாகிக் குழந்தையோடுள்ள ஒரு வேலையில்லாத வாலிபன். வாலிபர்களை 'ஐ லவ் யூ' என்று கூறிக் கிறங்க வைத்து மூக்குடைக்கும் ஒரு சிங்காரி. இவள் உண்மைக் காதலனைத் தேடி அலைகிறாளாம்! அந்த உண்மைக் காதலனாகப் பிழைக்க வழி தேடி அலையும் கண்ணனைத் (ஜெய்கணேஷ்) தேர்ந்தெடுக்கிறாள். தான் வாழப் பணம் சுரக்கும் பாத்திரமாகச் சங்கீதாவை (ராதிகா) நினைக்கிறான் கண்ணன், உண்மையை மறைத்து. தான் காதலிப்பவனுக்கு முன்பே ஒரு மனைவி இருக்கிறாள் என்பதை அறிந்த பிறகு சங்கீதா — கண்ணீர் வடிக்கிறாள். மூத்த மனைவி மாலாவாக சுமித்ரா கச்சிதமாக நடித்திருக்கிறார். இரண்டு பேரைக் காதலிக்கும் அதிர்ஷ்டக்காரராக ஜெய்கணேஷ் ராதிகாவையும், சுமித்ராவையும் சமாளிப்பது நிறைவாக இருக்கிறது. பல இடங்களில் சிரிக்க வைக்கவும் செய்கிறார். (காரைக்குடி நாராயணன் இதை ஹாஸ்யப் படமாக அல்லவா அறிவித்திருக்கிறார்!

தனக்கென ஒரு தனிப் பாணியை — தப்பு தப்பு — ராதிகா தமிழ் என்ற பாஷையை உருவாக்கிக் கொண்டுள்ள ராதிகா தமிழைக் கடித்துக் கடித்துப் பேசுவது நமக்கெல்லாம் பழக்கமாகிப் பிடித்தும் போய் விட்டது. கட்டிப் பெண்ணாக முன்பகுதியில் நடிப்பது நன்றாக இருக்கிறது.

இளையராஜாவின் இசை இந்தச் சங்கீதாவைச் சரியாமல் வைக்க உதவலாம். 'அன்பே சங்கீதா! உனக்கு இப்படியொரு முடிவா?'

# "சட்டங்கள் நிலைப்பதில்லை"

**ஹபீப் ராஜா**



**ரொ**ம்பத் தீவிரமாக யோசித்த பின் தான் அவன் கறுப்புக் கோட்டையும், கவுனையும் மாட்டினான்.

சிறுவயதில் பள்ளிக்குச் செல்லும் வழியில் பரந்து நிற்கும் நீதிமன்றத்தைப் பார்க்கும் போது இந்த உலகத்துக்கே சம்பந்தமில்லாத ஏதோ ஒன்று நிற்பது போல்தான் தோன்றும்.

அந்தப் பள்ளிப் பருவத்தில் கனவில்கூட அவனை வக்கீலாக அவன் நினைத்துப் பார்த்தது இடையாது.

தூய வெள்ளை உடை கசங்கும்படியாக, மூச்சுத் திணறும்படி கூட்டம் நிறைந்த பஸ்ஸில் பிரயாணம் செய்தபடியே அவன் யோசித்தான்.

'இந்த மனிதர்களுக்குள் இவ்வளவு பிரச்னைகளா!'

'பளிச்'சென்று கேஸ் கட்டுகளும் ஃபைல் மூட்டைகளும் சட்டப் புத்தகங்களும் நிரம்பிய அவனுடைய ஆபீஸ் அறை ஞாபகம் வந்தது.

நீதிமன்றம் சமுதாயத்தில் இவ்வளவு முக்கிய அங்கமா!

சரியாக....பத்து முப்பத்தைந்துக்கு கோர்ட் காம்பவுண்டுக்குள் நுழைந்தவுடன் உடம்பிலும் மூளையிலும் ஒரு பரபரப்புக் கலந்த கூர்மை படர்ந்தது.

கட்சிக்காரர்களை விலக்கிக் கொண்டு அறையின் உள்ளே நுழைய முயன்றவன் அவர்களுக்கிடையே அந்த ஜீவனைப் பார்த்தான். கையை உயர்த்தி ஒரு கும்பிடு. . தடித்த, வெயில் படர்ந்த, பழைய கண்ணாடிக்குள்ளிருந்து வயதான கண்கள் கெஞ்சின. வாழ்க்கைப் போராட்டத்தில் சிக்கிப் பிழியப்பட்ட ஓர் உருவம். அறுபத்தைந்து வயதைக் கடந்த சம்பந்தமூர்த்திக்கு நீதி தேவை.

''கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. இதோ வந்துடறேன்!''

உள்ளே நுழைந்து பளிச்சென்று உட்கார்ந்திருக்கும் சீனியருக்கு குட்மார்னிங் சொன்னான்.

அன்றைய லிஸ்டைப் பார்த்தான். வரிசை வரிசையாக கேஸ் நம்பர்கள், வக்கீல்களின் பெயர்கள். ''பிரகாஷ், மதியம் ஒரு மணி வரைக்கும் வெளியே ஒரு சின்ன வேலை இருக்கிறது. அதுவரைக்கும் இந்த இரண்டு கேஸ்களை மட்டும் பார்த்துக் கொள்கிறீர்களா?''

அதுபற்றிய இரண்டு மூன்று பாயிண்டுகளை மட்டும் கூறிவிட்டு வெளியே வந்தான்.

**பெ**ரியவரை அழைத்துக் கொண்டு மீண்டும் நாற்பது நிமிடங்கள் பஸ் பயணம். இரண்டு நாட்களுக்கு முன் சம்பந்தமூர்த்தி கோர்ட் வராந்தாவில் அலைந்து கொண்டிருந்தார்.

''என்னுடைய மகனைப் போலீஸில் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள். வக்கீல் சாரைப் பார்க்கணும்.''

''ஐயா....சொன்னாக் கேளுங்க... இந்த வக்கீலை எல்லாம் பார்க்க முடியாது .நிறையப் பணம் ஆகும்.... ஆ... பாதையை மறைக்காதீங்க. அப்படித் தள்ளி நில்லுங்க.''

ஆபீஸ் பியூன் செல்வம் அவரை விரட்டிக் கொண்டிருந்த பொழுது பெரியவரிடம் விஷயத்தை நிதானமாகக் கேட்டான். வாழ்க்கையின் பலத்த அடிகளை அடுக்கடுக்காகச் சந்தித்து உழன்று போன இந்த அறுபத்தேழு வயதில் அவருடைய ஒரே நம்பிக்கையாக மாதம் நூற்றிருபது கொண்டு வரும் அவருடைய ஒரே மகன் இராஜேந்திரன். பி.யூ.சி.யுடன் வீட்டில் வறுமை காரணமாகப் படிப்பை நிறுத்திவிட்டு வேலையில் சேர்ந்தவன். கல்லூரி இளைஞர்களைப் பார்க்கும் போதெல்லாம் ஏக்கப் பெருமூச்சு விடுபவன்.

புளியந்தோப்புப் பகுதியில் கம்பெனி வேலையாக கலெக்ஷனுக்குச் சென்றவன் வழி மறைத்து நிறுத்தப்பட்டான். போலீஸ் இலாகாவினால் அங்கீகரிக்கப்பட்ட அந்த ''ஏரியா''வின் ஆஸ்தான ரவுடி ஒருவனின் ஐந்து ஆட்கள் அவனைச் சூழ்ந்து கொண்டனர்.

மூன்று நிமிடங்களில் இராசேந்திரன் மயக்கமாகி விட்டான். உதடு கிழிந்து ரத்தம்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

லதா: கல்யாணத்துக்கு முன்னாடி நிறைய LBW அடிச்சு என்னை ஏமாத்தித் தாலி கட்டிட்டார் என் கணவர்!

சாந்தி: அப்படின்னா என்ன அர்த்தம்?

லதா: Lies before Wedding நிறையச் சொல்லி என்னை ஏமாத்திட்டாருங்கறேன்!

-ஜி. நடராஜன்



கொட்டியது. சட்டை கிழிக்கப்பட்டது. சைக்கிள் குப்பைக் கூளமாகியது. கையிலிருந்த கலெக்ஷன் பணம் கை மாறியது. குப்பைத் தொட்டி ஓரமாகத் தூக்கி எறியப் பட்டான். ''.....யாருகிட்டே மோதிப் பார்க்கிறே.... வாத்தியாரைப் பார்த்து எவனெவனோ சல்யூட் அடிக்கிறான். நீ என்னடா.... ஈசு'' ரௌடிகளுக்கே உரித்தான நிதானம் கலந்த அவசரத்துடன் வேலைகள்



மேலிட உத்தரவுப்படி நடந்தன. ஒருவன் சாராயப் பாட்டிலை எடுத்துக் கடகடவென்று இராஜேந்திரனின் வாயில் ஊற்றினான். மீதி பாட்டில் அவனுடைய பைக்குள் திணிக்கப் பட்டது. அடுத்த ஐந்து நிமிடங்களில் போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் எட்டியது.

அவன் குற்றம் சாட்டப்பட்டு விட்டான். மிகவும் மரியாதையுடன் சந்துரு, பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெரியவரைக் கேட்டான்: ''உங்க பையனை அடித்தபோது பார்த்த சாட்சிகள் யாராவது இருக்காங்களா?''

''எனக்குத் தெரியாதுய்யா... இருந்தாலும் அவ்வளவு தைரியமா யாரும் சாட்சி சொல்ல வர மாட்டாங்க.''

''அவனை அடிக்க வேண்டிய சூழ்நிலை உருவாவதற்கு முன் விரோதம் பற்றிய தகவல் ஏதாவது தெரியுமா?''

''ஒரு வாரத்துக்கு முன்னாடி அந்தப் பகுதியில் மொத்தமாகச் சாராயம் விற்கும் வியாபாரி இவ… மிரட்டியிருக்க… … இந்தப் பக்கம் வந்த… …ல்லை. விருக்காதுடான்னு.... தினமும் கம்பெனி கலெக்ஷனுக்காக அந்தப் பகுதிக்குப் போய்த்தானய்யா

ஆகணும். ஒரு பாவமும் அறியாத சின்ன குழந்தைய்யா அவன். என் மகன் மாதிரியிருந்து நீங்கதான் அவனைக் காப்பாத்தணும்....''

'படக்'கென்று கையைப்பிடித்துக்கொண்டு பெரியவர் உணர்ச்சி வசப்பட்டுக் கண் கலங்கினார். ''உணர்ச்சி வசப்படாதீங்க!'' சுற்று முற்றும் பார்த்து விட்டு லேசாக அதட்டினான். போலீஸ் ஸ்டேஷன், ரோட்டை விட்டு உட்பகுதியில் சற்று மறைவாக அமைந்திருந்தது. பெரியவரைச் சற்று வெளியே நிற்குமாறு கூறிவிட்டு உள்ளே நுழைந்தான். மூளை சுறுசுறுப்பாகியது. மூன்று செக்ஷன்களையும் அலசியது.

''வணக்கம் ஏட்டய்யா! இன்ஸ்பெக்டர் இருக்காங்களா?'' நிமிர்ந்து பார்த்தார் ஏட்டு. ஒன்றும் பதில் பேசாமல் கையை








### என்னைப்பற்றிச் சிலவரிகள்

பிறந்து வளர்ந்தது மதுரையில். இலக்கியத்தை மதுரை அமெரிக்கன் கல்லூரியிலும் சட்டத்தைச் சென்னை சட்டக்கல்லூரியிலும் பயின்றபின் தற்போது வழக்கறிஞராகத் தொழில் புரிவது சென்னை உயர்நீதி மன்றத்தில். இலக்கிய ஈடுபாடு இரத்தத்தோடு ஊறியது.

ஜரபிப்ராஜு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அசைத்து உள்ளே போகச் சொன்னார். பத்து நிமிடங்கள் கழித்து இன்ஸ்பெக்டர் வந்தார்.

''குட்மார்னிங்.''

புன்முறுவலுடன் அவரும் குட்மார்னிங் சொல்லி விட்டு இருக்கையில் அமர்ந்தது, சற்று நம்பிக்கை யளித்தது. சந்துரு தன்னைப் பற்றிச் சுருக்கமாகக் கூறிவிட்டு நிகழ்ச்சியை விளக்கினான்.

''ஓ.... அந்தப் பையனா...? அது எல்லாம் முடிஞ்சு போச்சே சார்... கேஸ் ரிஜிஸ்டர் பண்ணியாச்சே....''

''சார்! இந்தக் கேஸை நீங்க ரிஜிஸ்டர் பண்ணியிருக்கவே கூடாது. கொஞ்சம் நீர விசாரிச்சிருக்கணும். அந்தப் பையனுக்குக் குடிக்கும் பழக்கமே சுத்தமாகக் கிடையாது. ஏழையானாலும் ரொம்ப நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன். ஒரு நிரபராதி ஜெயிலுக்குள்ளே போவது ரொம்பவும் அநியாயம். நூறு குற்றவாளிகள் தப்பித்தாலும் ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது.''

இன்ஸ்பெக்டர் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து பையன் ''புதுசோ'' என்பதைப் போல் பார்த்தார்.

''அவன் நிரபராதின்னு நிரூபிக்கத்தான் கோர்ட் இருக்குதுங்களே... நீங்க வாதாடி அங்கே போய் ப்ரூவ் பண்ணுங்க. குற்றம் பண்ணினவங்களைப் புடிக்கறதுதான் எங்களோட வேலை. தண்டிக்கிறது எல்லாம் கோர்ட் வேலை.''

''கோர்ட் கொடுக்கும் தண்டனையை விட விசாரணையிலிருந்தும் ஒரு நிரபராதி படும் அவஸ்தை மிகவும் கொடூரமானது.'' இன்ஸ்பெக்டர் கடிகாரத்தைப் பார்த்தார். இனி இவரிடம் பேசிப் பயனில்லை.

''நன்றி. நானே கோர்ட்டில் பெயில் பெட்டிஷன் மூவ் செய்கிறேன்!''

''ஆல் தி பெஸ்ட்'' என்றார்.

**மீ**ண்டும் ஹைகோர்ட் காம்பவுண்ட்.

''ஐயா.... என்னுடைய பையனை விட்டுடுவாங்களா?'' வெகு நேரம் பேசாமல் வந்த பெரியவர் இறுதியில் தம்முடைய எதிர்பார்ப்பை வெளியிட்டார். முடிந்த அளவு அவருக்குப் புரியும்படி சந்துரு நிலைமையை விளக்கினான்.

இறுதியாக ஒரு முயற்சி.

இது சம்பந்தப்பட்ட முக்கியமான வக்கீல் ஒருவரைச் சந்திக்கலாம். அவர் மீது சந்துருவுக்குச் சற்று மதிப்பு உண்டு. கொஞ்சம் தெரிந்தவர் கூட. அவருக்கு இருக்கும் சில அதிகாரத்தின் மூலம் மனிதாபிமானத்துடன் இந்தப் பிரச்னையை அணுகினால் அந்தப் பையனுக்கு நிச்சயம் ஒரு வழி பிறக்கும். அரைமணி நேரம் காத்திருந்த பின்னர் அவருடைய தரிசனம் கிடைத்தது. மீண்டும் ஒருமுறை நடந்த விஷயத்தைச் சற்று உணர்ச்சி வயப்பட்டபடியே கூறினான். ''அவன் கொண்டு வரும் நான்கைந்து ரூபாயில்தான் இந்தக் குடும்பமே பிழைத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் நினைத்தால் இந்தக் கேஸை விசாரணை நிலையிலேயே தள்ளிவிட முடியும்.''

''நீங்க பிராக்டிக்ஸ் ஆரம்பித்து எத்தனை வருடமாகிறது?'' என்று கேட்டார் அவர்.

''மூன்று மாதம்.''

''முதலில் இது சம்பந்தமாக என்னைப் பார்க்க வந்ததே தப்பு. நீங்க இங்கு சொன்னவைகளையெல்லாம் 'கோர்ட்டில்தான் கூறணும், என்னிடம் கூற வேண்டிய அவசியம் இல்லை.

''சார்! நாம் தாமதிக்கும் ஒவ்வொரு நாளும் அந்தக் குடும்பத்துக்கு ஒரு நரகம் போன்றது. நாம் கோர்ட்டில் போய் நிருபதற்குள் நீதி எப்போதோ செத்துவிட்டிருக்கும்.''

''வெயிட் மிஸ்டர்... பதினைந்து வருஷமா நான் இதுமாதிரி எவ்வளவோ கேஸ்கள் பார்த்திருக்கேன். காசு குடுக்கிறவன் சார்பில் வாதாடுவது நம்ப ஜாதி. இதுலே என்ன சார் நீதி நியாயமெல்லாம்.''

சட்டென்று பேச்சை முடித்துக் கொண்டு அறையை விட்டு வெளியே வந்த சந்துருவின் மனத்தில் படபடப்பு அதிகமாகியது.

சில சமயங்களில் முக்கியமான சிலருடைய வெளி வேஷங்கள் கலையும் போது 'அப்பப்பா' எவ்வளவு கொடூரமாக இருக்கிறது.

**அ**றைக்குள் நுழைந்து முகம் அலம்பும் போது தான் படித்த படிப்பு எவ்வளவு மலிவானது என்பது அவனுக்குப் புரிந்தது.

அந்தக் காலத்து இமானுவல் கான்ட் முதல் இன்றைய கிருஷ்ணய்யர் வரை அவன் படித்தது எவ்வளவோ சட்ட விளக்கங்கள், நுணுக்கங்கள். ஆயினும் இராஜேந்திரனைப் போன்ற ஒன்றும் அறியாத இளைஞனுக்கு நீதி வழங்குவதில் சட்டம் ஜெயிக்க முடியவில்லையே... ஏன்? சட்டங்கள் நிலைக்கின்றனவா?

இல்லை .... நிச்சயமாக இல்லை. ..சட்டங்கள் நிலைப்பதில்லை.... பின் வேறு என்ன தான் நிலைக்கிறது...?

குழம்பிப் போய்க் கிடந்த மனத்தில் ''பளிச்''சென்று ஒரு மின்னல் வெட்டி மறைந்தது.

அட கடவுளே...!

சின்ன வயதிலிருந்து மீண்டும் மீண்டும் போதிக்கப்பட்ட ஒரு சாதாரண உண்மை. ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் முதல், பல பெரியவர்கள் முதற் கொண்டு நம்மிடம் புகுத்தப் பார்த்த உண்மை. புராணங்கள் இதைப் பற்றிக் கதை கதையாகக் கூறும்போதெல்லாம் உதறித் தள்ளப்பட்ட உண்மை. இந்தச் சிறிய அனுபவத்தின் மூலம் ஒளிப் பிழம்பாகிறது.

''தர்மம்!''

ஆம்... அதுதான் நிலைக்கிறது.

''தர்மமா...! எங்கேயிருக்கிறது அது?''

கன்னங் கரேலென்று எக்காளச் சிரிப்புடன் ஒரு கேள்வி!

தர்மத்துக்கு ஏதேனும் ஒரு யதார்த்தமான உருவம் இருக்கிறதா? அல்லது அது ஒரு போலிக் கற்பனையா? சந்துருவைப் பொறுத்த வரையில், அவனுடைய இந்தக் கேஸைப் பொறுத்த வரையில் இருக்கிறது.

இராஜேந்திரனின் துன்பத்திலும், பெரியவரின் பரிதவிப்பிலும், சந்துருவின் முயற்சியிலும் தர்மம் தாங்கிக் கொண்டிருக்கிறது.

''இதை நான் விடப் போவதில்லை. நானே கோர்ட்டில் வாதாடப் போகிறேன். சாட்சிகளை உடைத்தெறியப் போகிறேன்.''

அன்று இரவு வெகு நேரம் வரை சட்டப் புத்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான்.



# டைரக்டர் ஸார் ஒரு யு.கே.ஜி.



நாடக விமர்சனம்

என்ன தலைப்பு இது? ஏதாவது புரிகிறதோ? சிறந்த திரைப்பட இயக்குனர், கதாபாத்திரங்களின் மனத் தத்துவங்களை யெல்லாம் புரிந்துகொண்டு படமெடுப்பவர், பெரும் புகழும் பெற்றவர், தமது சொந்த மனைவியின் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் குடும்ப வாழ்வைப் பொறுத்த மட்டில் அரிச்சுவடி கூட அறியாதவராய் இருக்கிறார். இதைத்தான் ''டைரக்டர் ஸார் ஒரு யு.கே.ஜி.'' என்று விசு குறிப்பிடுகிறார் என்று நாடகம் பார்த்து முடிந்ததும் எனக்குத் தோன்றியது. வேறு நல்ல தலைப்பாகத் தேர்ந்தெடுத்திருக்கலாம்.

தலைப்பை விட்டுத் தள்ளுங்கள்! நாடகத்தை அப்படித் தள்ளிவிட முடியாது. நல்ல கதை அம்சம், அத்துடன் பிரிக்க முடியாதபடி இழையோடும் நல்ல பயனுள்ள கருத்து, அளவான நகைச்சுவை எல்லாம் பொருந்தி இருக்கின்றன. ''சினிமாவுக்கு நான் அறிமுகமாகு முன்னரே இதை எழுதிவிட்டேன் ஸார்'' என்றார் விசு. நம்ப முடியவில்லை! திரை உலகில் நன்கு அறிமுகப்பட்டுப் பிறகு எழுதியது போலவே இருக்கிறது. திரை உலகினர் யதார்த்தத்தைச் சந்திக்கத் துணிவு கொண்டால் நாடகத்தில் குறை காண மாட்டார்கள், ஏற்பார்கள்.

கதை வசனம் டைரக்ஷன் அனைத்தையும் ஏற்ற விசு நடிக்கவில்லை. அந்தக் குறை தெரியாதபடிக்கு எம். ஆர். ஆர். தியேட்டர்ஸின் நடிக நடிகையர் கவனித்துக் கொள்கின்றனர். ராஜாமணியும் சாரியும் டைரக்டருடைய தகப்பனாராகவும் டைரக்டராகவும் தோன்றி நாடகத்தின் கம்பீரத்தை நிலைநிறுத்துகிறார்கள் எனில் ராமசாமியும் ரவியும் துணை டைரக்டர்களாக வந்து நகைச் சுவைக்குத் துணை நிற்கிறார்கள். கதாநாயகி பாத்திரமும் நடிகர் குருமூர்த்தி பாத்திரமும் மிகவும் திறம்பட உயர்வாகவும் நுணுக்கமாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளன. கடினமான இந்த வேஷங்களை ஏற்றுச் செவ்வனே நடித்தார்கள் ஆனந்தியும் ரங்காவும். டைரக்டரின் தாயார் மகனைப் பற்றி அட்டகாசமாகப் பெருமைப்பட்டுக் கொள்வது இருக்கட்டும். மைதிலியின் நடிப்பு நம்மைப் பெருமைப்பட வைக்கிறது.

பின்னணி இசை — இதற்கு நமது நாடகங்களில் ஒரு நல்ல கதி பிறக்கக் கூடாதா?

— குட்டி கிருஷ்ணன்


VEP
Soap
VEP

# வட்டமேஜை




● என் குழந்தை சு. வசுமதி ஒன்றும் வகுப்புப் படிக்கிறாள். ''பைசா கொடு—லாத்திரி சீட்டு வாங்கணும்'' என்று தொந்தரவு செய்தாள். விசாரித்ததில் ''குழந்தைகள் ஆண்டாம்; குழந்தைகளுக்குப் பரிசுச் சீட்டாம்; அரசாங்க வெளியீடாம்; கல்வி இலாகா அதிகாரிகளின் கட்டாயமாம்; ஒவ்வொரு பள்ளியிலும் 'இவ்வளவு' சீட்டு விற்க வேண்டுமாம். — ஒரு சீட்டு ஐம்பது பைசாவாம்; ஒவ்வொரு குழந்தையும் ஒரு சீட்டு கட்டாயம் வாங்கணுமாம் — பரிசு உண்டாம். அங்கஹீனமான குழந்தைகளுக்குத் தனிப் பரிசு ஆயிரமாம்! — அட கடவுளே! பிஞ்சு உள்ளங்களில் லாட்டரிப் பரிசு புத்தியா? அங்கஹீனக் குழந்தைகளுக்குத் தாழ்வு மனப்பான்மையை உண்டாக்குவதா?

பாதூர் ஆர். இந்திரா

● நேரு பிறந்த தினமும் குழந்தைகள் தினமுமான 14—11—79 அன்று காலை 7-30 மணிக்குத் திருச்சி வானொலி நிலையத்தார் பாப்பா பாட்டு எனக் கூறி ''என்னடி பாப்பா சௌக்கியமா'' எனத் துவங்கும் சினிமாப் பாடலை முதலாவதாக ஒலிபரப்பினர். முதல் வரி நன்றாகத்தான் இருந்தது. ஆனால் அடுத்து வரும் வரிகள்? இனிமேலாவது வானொலி நிலையத்தார் பாடல்களைக் கவனித்து நாட்களையும் கவனித்து அதற்கேற்றாற்போல் ஒலிபரப்புவார்களா?

கரூர் எஸ். வெங்கடேசுவரன்

● அகிலனின் கட்டுரைத் தொடர் படிக்கச் சுவையாய் இருப்பதுடன், மெய் விவரங்கள் அடங்கியதாக — காய்தல் உவத்தல் இன்றி நேர்மையுடன் — எழுதப்பட்டிருப்பது அதன் தனிச் சிறப்பு. எனவேதான் அதில் (12-8-79 இதழில்) உள்ள ஒரு சிறு பிழையைத் தங்களுக்குச் சுட்டிக் காட்டுவது என் கடமை என்று கருதுகிறேன். ''சோவியத் நாட்டில் 'டெலிபோன் டைரக்டரி' அச்சிடும் பழக்கமில்லை'' என்று எழுதியிருக்கிறார். இது சரியல்ல. மாஸ்கோவில் டெலிபோன்களின் எண்ணிக்கை பத்து லட்சத்துக்கும் மேல். ஆயினும் பல தொகுதிகள் அடங்கிய முழுமையான டெலிபோன் டைரக்டரி சில ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பட்டது.

மாஸ்கோ பூர்ணம் சோமசுந்தரம்

◘ ஆழி வரைந்த வரைபடங்கள், டி.வி.எஸ். கிருபானந்த வாரியார், முதலியோரது சித்திரங்கள் மிகவும் சிறப்பாக இருந்தன.

சென்னை தீ. பாலசுப்பிரமணியன்

◘ மீ. ப. சோமுவின் நீங்காத நினைவில் நீபன் அமரத்துவம் பெற்று விட்டார். கவிமணியின் வெண்பா பற்றி டி.கே.சி. கூறியதைப் படித்ததும் துன்பத்தில் இன்பம் காணும் ஒரு தமிழ் உள்ளத்தை உணரும் வாய்ப்பு கிட்டியது.

பம்பாய் பா. ச. சீதாராமன்

◘ திரு தி. ச. கலியபெருமாளை ஆசிரியராகக் கொண்டு பழனியப்பா பிரதர்ஸ் (சென்னை-14) சிறுவர்களுக்கென்றே 'அறிவியல் அறிஞர்' என்ற வரிசையில் ரூ. இரண்டுக்கு ''தாமஸ் ஆல்வா எடிசன்'' வாழ்க்கை நிகழ்ச்சிகள் புத்தகம் தமிழில் வெளியிட்டிருப்பதை 'கடுகு' அவர்கள் அறியவில்லை போலும்!

தஞ்சை கே. ஆர். உபேந்திரன்

(தஞ்சை மணியன் சேஷாசலம் கம்பெனி 'அருங் கலைச்செல்வர் நால்வர்' என்ற புத்தகம் வெளியிட்டுள்ளதைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார். மூன்றும் பதிப்பு 1967 விலாசம் : 14, கங்குராமச் செட்டித் தெரு, சென்னை-1)

◘ பாகிஸ்தானுக்கு எதிரான முதல் கிரிக்கெட் டெஸ்ட் கூட நடந்து டிரா ஆகிவிட்டது. இன்னும் கல்கியில் பாகிஸ்தான் ஆட்டக்காரர்களின் படங்களைக் காணோமே என்று நினைத்தேன். பிரசுரித்து விட்டீர்கள். இனி உங்களை ஆயுசில் வெல்ல யாராலும் முடியாது.

சென்னை-5 எல். வி. ராஜசேகர்

◘ ''இடிதாங்கி இருக்கிறது'' என்ற ஒரு நேர்மையான தலையங்கத்தை எழுதித்தாங்கள் ஓர் உண்மையான ஜனநாயகவாதி, எந்தக் கட்சியையும் சாராதவர் என்பதைத் தெள்ளத் தெளிவாக விளக்கி விட்டீர்கள். தொடரட்டும் தங்களின் நேர்மையான பணி.

சென்னை-45 இரா. தியாகராஜன்

◘ அவ்வை கருத்தரங்கில் முதற்பரிசு பெற்ற கட்டுரையின் ஆசிரியையை வாசகர்களின் சார்பில் வாழ்த்துகின்றேன். ஓர் உயர்ந்த இலக்கியப் படைப்பை நன்கு சுவைத்து அச்சுவையின் இனிமையை இலக்கியத் திறனுடன் வெளியிடும் முறையும் அதில் கண்ட வெற்றியும் வாசகர்களுக்கு நல் விருந்தாக அமைந்துள்ளது.

கோமாரபாளையம் இலக்குமிநாராயணன்
முதல்வர்
Govt Training College

# உங்கள் கனவுகள் நனவாக...

# சிண்டிகேட் பாங்க்



வாழ்க்கையில் பல்வேறு கட்டங்களில் ஏற்படும் தேவைகளை நிறைவு செய்யவும், நம்பிக்கைகள் செயல் வடிவம் பெறவும், கனவுகள் நனவாகவும் சிண்டிகேட் பாங்க் பல சீரிய திட்டங்களை வகுத்துள்ளது. உங்கள் குடும்பத்தினரில், குறிப்பாக, உங்கள் அருமைக் குழந்தைகளின் எதிர்காலத்தை ஒளிமயமாக்க இன்றே செயல்படுவீர். •

## ஆதர்ஷ் சேமிப்புத் திட்டம்

நாள்தோறும் சிறிய தொகையான 25 பைசாவையும் இத்திட்டத்தில் சேமிக்கலாம். எங்கள் அதிகாரம் பெற்ற ஊழியர் உங்களை நாடி தொகையை வசூல் செய்வார். தினசரி சேமிக்க விரும்புவோர்க்கு நல்லதொரு திட்டம்.

## சேவிங்ஸ் பாங்க் கணக்கு

இக்கணக்கில் உங்களால் இயன்ற அளவு மீதமாகும் தொகையை செலுத்தி வரலாம். அவசியமில்லாத செலவினங்களைத் தவிர்க்க முற்படுங்கள். வளமான எதிர்காலத்தை உருவாக்க இன்றே சேமிக்கத் தொடங்குங்கள்.



## குழந்தைகள் நல பாதுகாப்புப் பத்திரம்

உங்கள் குழந்தைகளின் எதிர்காலத்தை வளமானதாக்கத் திட்டமிட தக்க நேரம் இதுவே. அத்திட்டம் உயர் கல்வியாக இருக்கலாம். இப்பத்திரம் உங்கள் திட்டங்கள் எளிதில் நிறைவேற உதவி செய்கிறது. இப்பத்திரத்தின் திரண்ட தொகையை உங்கள் குழந்தைகள் மைனர்களாக இருப்பின் நீங்களே பெற்றுக் கொள்ளலாம். அவர்கள் மேஜர்களாகிவிட்டால் அவர்களுக்கே அத்தொகை உரியதாகும். ரூ. 100 முதல் அதன் மடங்குகளில் இப்பத்திரங்கள் கிடைக்கின்றன. ரூ. 1000 மதிப்புள்ள பத்திரம் 39 மாத கால இறுதியில் ரூ. 1314.50 ஆகவும் 63 மாத கால இறுதியில் ரூ. 1680.00 ஆகவும் வளர்கிறது.

## நிரந்தர வைப்பீடு

உங்களுடைய சேமிப்புத் தொகைகள் கணிசமான தொகையானதும் அதனை 15 நாட்கள் முதல் 5 ஆண்டுகளுக்கோ அதற்கும் மேற்பட்ட காலத்திற்கோ நிலையான வைப்பீட்டில் செலுத்துங்கள். நீண்டகால வைப்பு அதிக லாபத்தைத் தரும். உங்கள் குழந்தைகளுக்கும் நன்மை பயப்பது.

## ஸுரக்ஷா வைப்பீடு

நீங்கள் ஆயுள் இன்ஷூரன்ஸ் பாலிஸி எடுத்திருக்கலாம். ஆயினும், எதிர்பாராத விபத்துக்கள் நேரிடும் சூழ்நிலையில் வசிக்கும் உங்களுக்கு ஸுரக்ஷா வைப்பீடு இன்றியமையாதது. ரூ. 500ஐ 61 மாதங்களுக்கு இத்திட்டத்தில் வைப்பீடு செய்தால் வட்டி கிடைப்பதுடன் விபத்துக்கும் பாதுகாப்பு அளிக்கிறது.

## வீடு கட்ட உதவும் சேமிப்புத் திட்டம்

உங்களுக்கென சொந்த வீடு வேண்டாமா? இத்திட்டம் மனை வாங்கவும் வீடு கட்டவும் நிதி உதவுகிறது. 5 முதல் 10 ஆண்டுகளுக்கு மாதந்தோறும் ரூ. 25 செலுத்தி வந்தால் கால முடிவில் உங்கள் கணக்கில் உள்ள தொகையைப் போல் இரு மடங்கு தொகையை கடனாகப் பெற வாய்ப்பு உண்டு.

63 மாதத் திட்டம்

மாதந்தோறும் செலுத்த வேண்டிய தொகை:

| | | |
|---|---|---|
| ரூ. 100 | கடன் தொகை | ரூ. 16,400 |
| ரூ. 250 | " " | ரூ. 40,800 |

120 மாதத் திட்டம்

மாதந்தோறும் செலுத்த வேண்டிய தொகை:

| | | |
|---|---|---|
| ரூ. 100 | கடன் தொகை | ரூ. 40,800 |
| ரூ. 250 | " " | ரூ. 1,02,000 |

## தொடர் வைப்பீடுகள்

பல்நோக்கு கருத்துக்களுடன் இத்திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. உங்களுக்கும் உங்கள் குடும்பத்தினருக்கும் ஏற்படும் பணப் பிரச்சனைகளை எளிதாகத் தீர்க்க வல்லது. மாதந்தோறும் சிறிய தொகையான ரூ. 5ஐயும் சேமிப்பு செய்யலாம்.

## தொடர் வைப்பீடுடன் இணைந்த மாத வருமான திட்டம்

எல்லோரும் வாழ்க்கையின் ஒரு கட்டத்தில் ஓய்வு பெற்றுதான் ஆகவேண்டும். உங்கள் பொறுப்புக்களை செவ்வனே நிறைவேற்றியிருப்பீர்கள். பிராவிடெண்டு, கிராசுவடி மற்றும் இதர தொகைகளும் கைவசம் இருக்கும். இருந்த போதிலும் வாழ்க்கைத் தரத்தில் ஒரு இடைவெளி ஏற்படத்தான் செய்யும். இந்தப் பிரச்சனையைத் தீர்க்க சிண்டிகேட் பாங்க் இரு முனைத் திட்டம் ஒன்றினை வகுத்துள்ளது. விருப்பம்போல் ஏதேனும் ஒன்றினை பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

<u>திட்டம் (அ)</u> மாதந்தோறும் ரூ. 100ஐ 10 ஆண்டுகளுக்கு முதலீடு செய்யுங்கள். அதன் பிறகு ஒவ்வொரு மாதமும் ரூ. 169.85 பெறுவீர்கள். மற்றும் அசலும் வட்டியும் இணைந்து ரூ. 20,557 உங்கள் கணக்கில் நிலைத்து இருக்கும். 63 மாதங்களுக்கோ அதற்கு மேற்பட்ட காலத்திற்கோ குறிப்பிட்ட கால வைப்பீடாக வைத்துக் கொள்ளப்படும்.

<u>திட்டம் (ஆ)</u> 87 மாதங்களுக்கு மாதந்தோறும் ரூ. 100 செலுத்தி வந்தால் அதன் பிறகு 87 மாதங்களுக்கு ஒவ்வொரு மாதமும் ரூ. 200 பெறுவீர்கள். உங்களுக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகையான ரூ. 87ம் 88ம் மாதத்தில் கொடுக்கப்படும். 87 மாதங்களில் இரட்டிப்புத் தொகையைப் பெற தீட்டப்பட்ட இத்திட்டம் ஒப்பற்றது. சேமிப்புத் திட்டங்களைக் காட்டிலும் சாலச் சிறந்தது. இரு முனைப்பயன்களாக அதிக லாபம்! சிறந்த பாதுகாப்பு!!

## ப்ரகதி ரொக்கப் பத்திரம்

ஒரு சிறிய தொகையை ஒரு ஆண்டு முதல் 10 ஆண்டுகள் வரையில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு முதலீடு செய்தால் பெரிய முழுமையான ஒரு தொகையைப் பெறலாம். உதாரணமாக ரூ. 595.39ஐ இப்பத்திரத்தில் 63 மாதங்களுக்கு இட்டு வைத்தால் முழுத் தொகையாக ரூ. 1000.00 கிடைக்கும். பல மதிப்புகளில் இப்பத்திரங்கள் வழங்கப்படுகின்றன.

## விகாஸ் ரொக்கப் பத்திரம்

இப்பத்திரமும் உங்கள் நலனுக்காகவே வழங்கப்படுகிறது. ஓராண்டு முதல் 10 ஆண்டுகளுக்கு ரூ. 100, ரூ. 500, ரூ. 1000, ரூ. 5000 என்ற மதிப்புகளில் இப்பத்திரங்கள் கிடைக்கின்றன. பெருஞ்செலவினங்கள் ஏற்படும்போது விகாஸ் ரொக்கப்பத்திரம் கைகண்ட மருந்துபோல் உதவுகிறது.

## மாத வருமான திட்டம்

5 முதல் 10 ஆண்டுகளுக்கு ரூ. 1000ஐ இத்திட்டத்தில் முதலீடு செய்தால் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை அல்லது மாதந்தோறும் வட்டி கிடைக்கும். பணத்தட்டுப்பாடற்ற ஓய்வுக்கால வாழ்க்கைக்குச் சிறந்த திட்டம் இதுவே. அல்லது குமுலேடிவ் டெபாசிட் கணக்கு ஒன்று தொடங்குங்கள். அதில், மேற்படி கிடைக்கும் வட்டியை குறிப்பிட்ட காலத்திற்கு முதலீடு செய்யுங்கள். வட்டி வளர்கிறது. பாதுகாப்பும் உண்டு. உங்கள் தேவைகள் நிறைவேறும்.



## தொடர் வைப்பீடுடன் இணைந்த ஆரோக்ய பாதுகாப்புத் திட்டம்

உங்கள் குடும்பத்தில் நீங்கள் மற்றும் ஏவரேனும் நோய்வாய்ப்பட்டால் சிண்டிகேட் வங்கியின் படைப்பான இத்திட்டம் உதவி அளிக்கிறது. ஓராண்டு முதல் 10 ஆண்டுகளுக்கு ரூ. 10/- அல்லது அதன் மடங்குகளில் முதலீடு செய்தால் தேவைப்படும்போது உங்கள் கணக்கில் உள்ள தொகையைப் போல் இருமடங்கு தொகை கடனாக அளிக்கப்படும் (உச்ச வரம்பு ரூ. 5000/-) இக்கடன் தொகைக்கு குறைந்த வட்டிவிகித சலுகை உண்டு.

<u>எங்களது வேறு பல சிறப்புச் சேவைகள்</u>

இந்நாட்டில் உயர்படிப்புக்கும், அயல் நாடுகளுக்குச் சென்று உயர் கல்வி பெறவும் கடன் வசதி ■ எக்ஸிக்யூட்டர்-டிரஸ்டி இலவச சட்ட ஆலோசனைகள் ■ வரிகள் சம்பந்தப்பட்ட விளக்கங்கள் ■ அந்நிய நாடுகளில் வங்கித் தொடர்பு ■ பயணிகள் காசோலைகள் ■ பாதுகாப்புப் பெட்டகங்கள் ■ எக்ஸ்டென்ஷன் கவுண்டர் முதலியன.



**சிண்டிகேட் பாங்க்** உங்கள் நலனே எங்கள் குறிக்கோள்

# பூக்குழி

லக்ஷ்மி



## 17

நெருங்க கொள்ளா மகிழ்ச்சியில் அன்று இரவு அகல்யா ஒரு கணம் கூட உறங்கவில்லை. விடியு முன்பே இருள் பிரிவதற்குக் கூடக் காத்திராது அவள் தலை முழுகி உடுத்திக் கொண்டு தயாராகி விட்டாள். பூக்குழியில் இறங்க விரதம் எடுத்துக் கங்கணம் கட்டிய நாளிலிருந்து அவள் நித்தமும் தலைமுழுகி விட்டு சூரியோதயத்துடன் ஆரம்பமாகும் முத்துமாரியின் அபிஷேக ஆராதனைகளில் கலந்து கொள்ளத் தொடங்கியிருந்தாள். பகல் ஒருபொழுது மட்டுமே கொஞ்சம் உணவு. இரவு அரைத் தம்ளர் பால் என்று அப்படி ஒரு கடும் விரதம். கணவன் ராஜ்குமார் பத்திரமாக ஊர் வந்து சேர்ந்து வாழ்வு மலர எத்தகைய கடும் விரதத்தையும் அவள் ஏற்கத் தயாராக இருந்தாள்.

கொட்டிலில் கட்டியிருந்த கூழைப்பசு — செல்லக்குட்டி — சில நாட்களுக்குமுன்னர் தான் கன்று போட்டிருந்தது. செல்லக்குட்டி என்று ராஜ்குமார்தான் அந்தப் பசுவுக்குப் பெயர் வைத்திருந்தான்.

கூப்பிட்டால் நாய்க்குட்டி போல் பின்னால் ஓடிவரும் அந்தப் பசுவின் மீது அவனுக்கு மிக்க அன்பு.

ஊருக்குப் போகு முன்பு கூட கொட்டிலுக்குச் சென்று ஒரு கை புல்லை அள்ளிப் போட்டுவிட்டுச் செல்லக் குட்டியின் முதுகைத் தடவிக் கொஞ்சிவிட்டுத்தான் புறப்பட்டான்.

முதல் நாள் சிங்காரம் பசுவைக் குளிப்பாட்டிச் சுத்தப்படுத்தியிருந்தான். அகல்யா அதன் முகத்திலும் கொம்பிலும் மஞ்சள் தடவிக் குங்குமப் பொட்டு வைத்துக் கழுத்தில் சலங்கை கட்டித் தூபம் காட்டினாள்.

செல்லக்குட்டிக்குக் கூட எஜமான் வரப் போவது தெரிந்து விட்டது போலும். மஞ்சளும் குங்குமமுமாகப் பசுவின் முகத்தில் கூடக் களை கட்டிவிட்டிருந்தது. பட்டணம் படி கொள்ளும் பெரிய வெண்கலச் செம்பில் புல்லென்று நுரை மேலே எழும்பி நிற்கச் கரந்து கொடுத்த பாலை எடுத்துக்கொண்டு உள்ளே வந்தான் சிங்காரம்.

கன்று போட்ட மாட்டின் பால் தெளிந்து பின் வீட்டுக்கு உபயோகிக்கு முன் முத்து மாரிக்கு அபிஷேகத்துக்கு அனுப்பிவிடுவது அந்த வீட்டின் வழக்கம்.

''பாலை அப்படியே கோயிலுக்குக் கொண்டு போகணும். முதல் பால் ஆத்தாளுக்குத் தெரியுமில்லையா....'' அகல்யா உத்தர விட்டாள்.

''காலைப் பால் அம்மனுக்கு. சாயங்காலம் கரக்கிற பால் ஐயாவுக்கு....' அவருக்குப் பால் போளின்னு ரொம்பப் பிடிக்குமே... கொஞ்சம் அதையும் செஞ்சு வைச்சுடுங்களேன்....''பற்களைக் காட்டினான் சிங்காரம். இரண்டு நாட்களாக அவனுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. கையும் காலும் ஓடாது தவித்தான். யஜமானியிடம் பேசுகிறோம் என்ற வரம்பை மீறி வேடிக்கையாகவும் பரிசாகமாகவும் சரி சமமாகப் பேசினான். ஏ னென்னமோ பழைய கதைகளின் நினைப்புகளுடன் வளைய வந்து கொண்டிருந்தான்.

அம்மனுக்கு அபிஷேகத்துக்கென்று தனியாக இறக்கிய செவ்விளநீர் — கூழைப் பசுவின் பால் — திருச்சியிலிருந்து வாங்கி வந்த பன்னீர் — தானே அரைத்து இழைத்துக் கரைத்து — அத்தர் சேர்த்த சந்தனம் —



தோட்டத்து மல்லிகை — மஞ்சள் குங்குமம்— எல்லாவற்றுடன் புறப்பட்டு விட்டிருந்தாள் கோயிலுக்கு. அம்மனுக்கு அன்று கனகசபை உபயமாக அமர்க்களமாக அபிஷேகம் நடந்தேறியது.

கோயிலினின்று வந்ததுமே அவளுக்கு நிலைகொள்ளாத பரபரப்பு. பட்டுப் புடவையைக் களைந்துவிட்டு நூல் சேலையை உடுத்திக் கொண்டு அடுப்பருகே ஓடினாள்.

தும்பைப் பூப்போலத் தயாரித்து எடுத்து இடியாப்பத்தை வெள்ளிக் கிண்ணத்திலே போட்டுப் பத்திரமாக மூடி அப்பால் வைத்தாள். தேங்காய்த் துருவலைப் பிழிந்து எடுத்த பாலை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அதன் பக்கத்தில் வைத்து மூடினாள். அவர் வருவதற்குள் சமைத்துவிட வேண்டும் என்ற ஆத்திரத்தில் அறைக்குள்ளே வேகமாக வட்டமிட்டாள்.

கொல்லையிலிருந்து புடலம் பிஞ்சைப் பறித்துக் கொண்டு வந்து சிங்காரம் சமையலறைத் தரையின் மீது ஒரு பக்கமாக வைத்துவிட்டு அவளைப் பார்த்தான்.

''சொல்ல வேண்டாம் — எனக்குத் தெரியும். அவருக்குப் புடிச்ச புடலங்காய்க் கூட்டு செய்யப் போறேன். பூரணி எனக்கு உதவி செய்யக் கூட இருப்பா. அதனாலே பஸ் நிலையத்துக்குப் போய்த் தயாரா நின்னு கூட்டிவா. சாமான்களைத் தூக்கிக்கிட்டு வர உதவியாயிருக்கும்.'' உத்தரவிட்டாள்.

மாமியாருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைப் பரபரப்பாக முடித்தாள். ஹால் கடிகாரத்தின் எதிரொலியாக மகிழ்ச்சியின் கனம் தாளாத எதிர்பார்ப்பில் நெஞ்சு படபடக்க வீட்டுக்குள்ளே இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தாள்.

திருநல்லூர் பஸ் நிலையம் எப்பொழுதுமே கலகலப்பாகக் காணப்படும்: திருச்சிக்கும் சேலத்துக்கும் இடையே ஓடுகிற பஸ்கள் அனைத்தும் கால் மணி நேரமாவது அந்த நிலையத்தில் நிற்பது வழக்கம். அதுவும் விடியற் காலையிலேயே கிளம்பிவிடும் பஸ்கள் அந்த நிலையத்துக்கு அருகிலிருந்த ஹோட்டல்களையும் டீக்கடைகளையும்தான் நம்பிப் புறப்படுவது வழக்கம்.

வேலுசாமியின் டீக்கடை வாசலில் கிடந்த பெஞ்சியின் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான் சிங்காரம்.

சிங்கிள் டீயை வாங்கிக் குடித்துவிட்டு இடுப்பிலிருந்த வெற்றிலை பாக்கு நிறைந்த ஓலைப் பையை எடுத்தான்.

வெற்றிலை போட்டுக் குதப்பி உட்கார்ந்த இடத்திலிருந்து எதிரே கிடந்த வெள்ளைக் குத்துக்கல் மீது பல தடவை 'சதக் சதக்' கென்று துப்பி அலுத்துப் போனான்.

அரை மணிக்கு ஒரு தடவைதான் பஸ்கள் வருவது வழக்கம். அந்த அரை மணி இடைவெளி ஆயிரம் யுகமாக அவனுக்குப் பிரமிப்பைக் கொடுத்தது.

ஒவ்வொரு பஸ் வரும்போதும் தலையில் இறுக்கமாகக் கட்டிக் கொண்டிருந்த முண்டாசை அவிழ்த்துப் பரபரப்புடன் இடுப்பில் கட்டிக் கொண்டு சாலைக்குள் ஓடினான்.

ஊறுகாய்ப் பாட்டிலைக் குலுக்குவது போல் உடம்பைக் குலுக்கிக் கொண்டு நின்ற பஸ்ஸிலிருந்து இறங்கிய பயணிகளில் ராஜ்குமாரைக் காணவில்லை.

'விடியற்காலையிலேயே ரயில் வண்டி திருச்சி ஜங்ஷனுக்கு வந்துடுமே? பல் துலக்கி அங்கேயே காப்பி பலகாரத்தை முடிச்சுக் கொண்டாலும் ஐயா இந்நேரம் வந்திருக்கணுமே..., திருச்சிக்கும் திருநல்லூருக்கும்

# வளரும் பயிர்

பெரிய வித்வான்களின் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்வதுடன் இளம் தலைமுறையினருக்கும் இட மளித்து ஊக்குவித்து வருகின்றன, சங்கீத வித்வத் சபை போன்ற அமைப்புகள். ''அவர்கள் அவ்வளவு பேரையும் அறிமுகப்படுத்துவது இயலாத காரியம். அந்த வளரும் பயிரின் பிரதிநிதிகளாய் இருவரைப் பற்றிக் கூறுங்கள்'' என்று அகாடமி, தமிழிசை, ஃபைன் ஆர்ட்ஸ் சபைகளின் காரியதரிசிகளைக் கேட்டபோது:

✕ டி. வி. ராஜகோபால்

**திரு டி. வி. ராஜகோபால்**
*செயலாளர் மியூசிக் அகாதமி*

● சாருமதி ராமச்சந்திரன் கலைக்குடும்பத்தில் பிறந்தவர். ஒரு மணி நிகழ்ச்சியில் வாய்ப்பு அளித்து இந்த வருடம் இரண்டரை மணி நிகழ்ச்சியில் அவரைப் பாடச் சொல்லி யுள்ளோம். இவருக்கு முதல் வருடமே அகாதமி பரிசு கிடைத் துள்ளது. பின்பு திட்சதர் கிருதிகள் கற்றுக் கொள்ள இவ ருக்கு நாங்கள் உதவித் தொகை அளித்தோம். ஜி. என். பி. பாணியில் பாடும் இவர் குரல் ஒலிபெருக்கிக்கு ரொம்பப் பொருத்தமாக இருக்கிறது. நல்ல சாஸ்திரிய சங்கீதத்தை இவர் பாடக் கேட்கலாம்.

● கமதி நெடுமேறு ஆந்திராவைச் சேர்ந்தவர். நன்றாக மிருதங்கம் வாசிக்கிறார். பிரபல வித்வான் சிபாரிசு செய்ய இவருக்கு முதலில் ஒரு மணிக் கச் சேரி கொடுத்தோம். சதஸ் முடி யும் கடைசி நாளன்று இவர் கச்சேரி இருந்ததால், தேர்வுக் கமிட்டியினர் பரிசுக்குரியவர்களை அநேகமாகத் தேர்ந்தெடுத்தும் விட்டனர். இருந் தாலும், இவர் வாசிக்க ஆரம்பித்தது தான் தாமதம். இவர் வாசிப்பு, எல்லோரையும் கவர்ந்தது. இவ ருக்கே முதல் பரிசும் கிடைத்தது. இந்த வருடம் 2.30 மணி கச்சேரிக்கு மிருதங்கம் வாசிக்கிறார். நல்ல தாளக்கட்டு, இவரது மிருதங்கத்தில் தெரிகிறது. நிச்சயம் நல்ல எதிர் காலம் இவருக்கு உண்டு.


✕ சாருமதி ராமச்சந்திரன்


✕ கமதி நெடுமேறு

**திரு த. சங்கரன்**
*இயக்குநர், தமிழ் இசைச் சங்கம்*

● இந்த ஆண்டு தனிச் சிறப்புடன் இரு சகோதரக் கலைஞர்கள் நாதசுர முழக்கத்தால் உங்களை மகிழ்விக்கப் போகிறார்கள். பதி னைந்து வயதில் நாதசுரக் கலையைச் சிறப்பாக அப்பியசித்துப் பெரிய வித்வான்களைப் போல வல்லவராக விளங்குபவர்கள் டி. கே. எஸ். சுவாமிநாதனும், டி.கே.எஸ். மீனாட்சிசுந்தர மும். கடும் பயிற்சி பெற்ற பின்னரே மேடை யேறியவர்கள். திருப்பாம்புரம் நாதசுரப் பரம்பரையினர். எனது நண்பர் வீட்டின் திருமணத்தில் இவர்கள் வாசிப்பைக் கேட்டு

---

இரண்டு மணி ஓட்டம்தானே... ஒரு சமயம் டாக்ஸியிலேயே வருரா? வந்தாக்கூட இந்தப்பக்கமாத்தானே டாக்ஸி போகணும்?' கவலையுடன் தயங்கியபடி, பெஞ்சியில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

மறுபடியும் டீ சாப்பிட்டான். வெற்றிலை போட்டுத் துப்பினான். வெய்யில் ஏறிக் கொண்டு போனது. டீக்கடைக் கடிகாரத்தில் மணி பன்னிரண்டு ஆகியது. சாலையைச் சலிப்புடன் பார்த்துவிட்டு எழுந்திருந்தான்.

'ஊஹும்.... இனிமேல் பஸ்ஸில் வரமாட் டார். பட்டணத்திலே ரயிலைத் தவற விட்டிருக்கிறார். அதான் இப்படி.... ' தனக் குள்ளே பேசிக் கொண்டு மெல்ல வீட்டை நோக்கி நடந்தான்.

ராஜ்குமாரை அழைத்து வராதது அவ னது தவறு போன்ற குற்ற உணர்வால் தளர்ந்தபடி உள்ளே நுழைந்தான்.

'விடிந்ததும் விழுந்து அடித்துக் கொண்டு வந்துவிட்டான் என்று சம்பந்தி அம்மாள் தப்பாக நினைத்துக் கொள்ளக் கூடாது' என்று தம் ஆசையைக் கட்டுப்படுத்திக் கொண்டார் குருநாதன்.

பகல் உணவை அவசரமாக முடித்துக் கொண்டு குடையை எடுத்துக் கொண்டு, படை பதைக்கும் வெய்யிலில் புறப்பட்டார். மருமகனுக்குப் பிடிக்கும் என்று ஆசையுடன் தம் மனைவி செய்து வைத்த கடலை உருண்டை, கை முறுக்கு நிறைந்த தூக்குக் கூடையை மறக்காமல் எடுத்துக் கொண்டார்.



✱ த. சங்கரன்



✱ டி. கே. எஸ். கலைவாணன் (?),
✱ டி. கே. எஸ். மீனாட்சி சுந்தரம்

இரண்டு வருடங்கள் முன்பே வாய்ப்புக் கொடுத்தேன். பெரிய வித்வான்களும் சேர்ந்து பாராட்டினர். இவர்களின் வாசிப்பால் தமிழ் இசைச்சங்கத்துக்கும், இசைக்கும் பெருமையே.



✱ கழுகுமலை கந்தசாமி

● மதுரை சோமுவின் மாணவர் கழுகுமலை கந்தசாமி. சோமுவுடன் பின்பாட்டு பாடும்போது, கேட்டு இவரது சாரீரத்தைப் பாராட்டி வாய்ப்புக் கொடுத்தேன். நூற்றுக்கு நூறு தமிழ் அரங்கை வெற்றிகரமாக நடத்தி, தமிழிசை அன்பர்களின் உள்ளங்களைக் கவரக்கூடியவர். நல்ல குரல், இவருக்கு வரப்பிரசாதம். நான்கு மணிக்குப் பாடிய இவரை இந்த ஆண்டு ஆறு மணி நிகழ்ச்சியில் தனியாகப் பாடுமாறு வாய்ப்புக் கொடுத்து வைக்கியுள்ளோம்.

✱ நா. ராமச்சந்திரன்



## திரு நா. ராமச்சந்திரன்

செயலாளர், இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ்

● பிரபல வயலின் வித்வான் ராதா நாராயணனின் சகோதரி மரகதம் ராமஸ்வாமி. இரண்டு வருடங்கள் முன்பு அவர் இசையைப் பற்றிக் கேள்விப்பட்டு அவருக்கு வாய்ப்புக் கொடுத்தேன். நல்ல இனிமையான இசை. பெரிய வித்வான்களைப் போன்று ஸ்வரப் பிரஸ்தாரமும் ராக ஆலாபனையும் செய்கிறார். ராக ஆலாபனை செய்வதில் நல்ல மனோதர்மம் உள்ளது. சுத்தமான சங்கீதத்தை அவரிடம் கேட்க முடிகிறது. மரகதம் இந்த ஆண்டு இரண்டு மணிக் கச்சேரியிலன்றி மூன்று மணி இசை நிகழ்ச்சியில் பாடுகிறார். வித்வான்களே அவரை வெகுவாகப் பாராட்டியுள்ளனர்.

● பிரபல வயலின் வித்வான் சந்திரசேகரனின் மகள், வி. பாரதி. பக்க வாத்தியமாக மட்டுமல்லாது, தனியாகவும் வாசிப்பதில் நல்ல தேர்ச்சி பெற்றவர். இவ்வாண்டு இரண்டு மணிக் கச்சேரிக்கு வாசிக்கிறார். இவர் வயலின் வாசிப்பில் தந்தையின் பாணி பளிச்சிடுகிறது.

வயலினை ஒரு தனி லாகவத்துடன் அநுயாசமாகக் கையாள்கிறார். அடுத்தடுத்துப் பல சிறப்புகளைப் பெற வேண்டியவர். -பேட்டி: சிக்கி

✱ மரகதம் ராமஸ்வாமி



✱ வி. பாரதி



''நான் போய் முதல்லே கண்டுட்டு வரேன். நாளை வாக்கிலே நீ போய்ப் பார்க்கலாம்.'' மனைவியிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டார்.

மருமகனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையில் பஸ்ஸுக்குக் காத்திருக்கப் பொறுமை இல்லை அவருக்கு. 'கொஞ்ச தூரம்தானே நடந்தாப் போச்சு!' என்று கிளம்பிவிட்டிருந்தார். கிராமத்துவாசி அவர். நடப்பது சிரமமாகத் தோன்றவில்லை.

மருமகன் உதவியுடன் குளித்துவிட்டு, சுத்தமான புடவை யொன்றை உடுத்திக் கொண்டு கோதுமைக் கஞ்சியை ஒரு வாய் மட்டும் பருகிவிட்டு, பஞ்சரத்தினம் நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள்.

— வாயில் பக்கம் ஒரு சிறு சலசலப்புக் கேட்டாலும் ஆவலுடன் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்துப் பார்த்து அவளுக்குக் கழுத்து வலித்தது.

மகனது முகத்தைப் பார்க்க முடியாது பாழும் பார்வை சதி செய்து விட்டிருந்தது. பரவாயில்லை. குழந்தையின் குரலைக் கேட்டு அவனைத் தொட்டுப் பார்த்து 'ராஜா வாடா என் கண்ணே' என்று மார்போடு அணைத்துக் கொண்டு 'இனிமேல் என்னை விட்டு எங்கேயும் போயிடாதே. இந்த நெஞ்சுக்குத் தாங்கிக் கொள்கிற வலிமை இல்லேப்பா' என்று கூற வேண்டும் என்கிற பதற்றம் அவளுக்கு.

''அகல்யா... சிங்காரம் வருகிறானு பார்; ராஜா பயணத்திலே களைச்சுப் போய் வருவான். — வெந்நீரைத் தயாரா வச்சிரு.''—

அடுத்த
BLOW UP
எம்.ஜி.ஆர்



அடிக்கொரு தடவை மருமகளை ஏதாவது சொல்ல அழைத்துக் கொண்டிருந்தாள்.

அகல்யா மட்டுமென்ன? இருப்பே கொள்ளாது உள்ளுக்கும் வாசலுக்கும் கால் ஓய நடந்து கொண்டிருந்தாள்.

பொழுது உச்சியை அடைந்த சமயம். உற்சாகம் குன்றி முகம் சாம்பி, சிங்காரம் மெல்ல நடந்து தனியே உள்ளே வந்ததைக் கண்டு திகைத்துப் போனான்.

''இதுவரை ஐயாவைக் காணலே. ஒரு சமயம் டாக்ஸியிலேயே வருரோ என்னவோ?'' அகல்யாவின் வாடிய முகத்தைப் பார்க்கப் பிடிக்காது பின் பக்கம் சென்றுவிட்டான் அவன்.

கொஞ்ச நேரம் சென்றதும் வாசல் கதவு தட்டப்பட்டதைக் கேட்டு அகல்யா ஒரே ஓட்டமாக ஓடித் திறந்தாள். மூச்சிரைக்க வெளியே நின்ற தந்தையைக் கண்டு ''நீங்களா அப்பா! வாங்க....'' என்று அழைத்தாள்.

அவள் குரலில் தொனித்த ஏமாற்றமும் முகமும் அவருக்கு விஷயத்தைச் சொல்லி விட்டன.

''மாப்பிள்ளை இன்னமும் வரலியா அம்மா?''

''தந்திப் பிரகாரம் இந்நேரம் வந்திருக்கணும். ஏன் வரலேயோ தெரியலே. ரொம்பக் கவலையா இருக்குப்பா....'' தந்தையைக் கண்டதும் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது அவளுக்கு. ''ஏன் இன்னமும் வரலே அப்பா?'' — கண் கலங்கத் திணறினள்.

''சே! சே! கண்களைத் துடைச்சுக்கோ. தாமதத்துக்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம். ரயில் தாமதமா வந்திருக்கலாம். பஸ்ஸைத் தவற விட்டிருக்கலாம். டாக்ஸி கிடைக்காமத் திண்டாடலாம். அந்தப் பிள்ளை எப்படித் தவிச்சுக்கிட்டிருக்கோ... என்னம்மா நீ... விவரம் தெரியாத பச்சைக் குழந்தையாட்டமா....'' கடிந்து கொண்டு உள்ளே வந்தார்.

''யாரு! சம்பந்தியா? வாங்கோ... உட்காருங்க.... உங்க கிட்ட பேசிலைாவது கொஞ்சம் தெம்பு ஏற்படலாம்போல இருக்கு. காலையிலிருந்து நாற்காலியிலே உட்கார்ந்த நான் இடத்தை விட்டு நகரலே. மூணு வருஷமா பிரிஞ்சு இருந்தேன். . உண்மைதான். ஆனால் இந்த மூணு மணி நேரத்தை என்னால தாங்கிக்க முடியலே.... பெத்த மனசு பித்துன்னு சொல்றது நிசந்தான். அந்தப் பிள்ளைக்கு இதெல்லாம் புரியுதோ என்னவோ...'' தழுதழுத்தாள் பஞ்சரத்தினம்.

''என்ன ஆயிடுச்சு? இப்படி இரண்டு பேரும் மனசைத் தளர விட்டிருக்கீங்க... ராத்திரிக்குள்ளே தம்பி வந்துடும் பயப்படாதீங்க'... ஏதாச்சும் கொஞ்சம் சாப்பிடுங்க.'' சமாதானப்படுத்தினர் குருநாதன்.

இருட்டும்வரை அவர் அங்கேயே இருந்தார். தெருவை எட்டிப் பார்த்து அவரும் சலித்துப் போனார்.

''ரயிலைத் தவற விட்டிருக்காப்பலே இருக்குது. கவலைப்படாதேம்மா. நாளைக்குக் கட்டாயம் மாப்பிள்ளை வந்து சேர்ந்துடுவார். அவர் வந்ததும் கொஞ்சம் சிங்காரத்துக்கிட்ட தகவல் அனுப்பி வை. உங்கம்மாவும் மருமகனைப் பார்க்கத் துடிச்சுக்கிட்டு இருக்கா.'' விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்.

இரண்டு தினங்கள் நகர்ந்தன. கலகலவென்றிருந்த வீட்டிலே பயங்கர மௌனம் குடிகொண்டு விட்டிருந்தது. 'ஏன் ராஜ்குமார் இன்னும் வரவில்லே...?' மருமகளிடம் கேட்கக் கூடப் பஞ்சரத்தினத்துக்கு அச்சமாக இருந்தது.

என்ன நேர்ந்து விட்டது? உடம்புக்குச் சுகமில்லையா? — தன் கவலைகளை மாமியாரிடம் பகிர்ந்து கொள்ள அகல்யாவுக்குப் பயமாக இருந்தது.

மூன்றாவது நாள். குருநாதன் கவலையைத் தாங்க முடியாது விசாரித்துப் போக வந்தார்.

தந்தையைக் கண்டதும் அகல்யாவுக்கு அழுகை வந்து விட்டது.

''அப்பா! அவருக்கு என்னவோ ஆயிடுத்து; அதனால்தான் வரலே.'' வாயிலிலேயே மகள் தந்தையைக் கண்டு விசும்பினள்.

''சே சே! அமங்களமா எதுவும் பேசாதே!'' தந்தை அதட்டிக் கொண்டு உள்ளே வந்தார்.

''வாங்கோ. உட்காருங்கோ. நீங்க வந்தது நல்லதாப் போச்சு. இந்தப் பொண்ணு ரெண்டு நாளாப் பட்டினி. ஏதாவது சாப்பிடச் சொல்லுங்கோ. என்னால பார்க்க முடிஞ்சா நான் எழுந்து கட்டாயப்படுத்தி ஒரு வாய் சாப்பிட வைச்சிருப்பேன்.... நீங்க ஒரு காரியம் செய்யுங்கோ. பணச் செலவைப் பத்தி யோசிக்காதீங்க. அக்கறை இல்லே. ஒரு தடை எங்களுக்காகப் பட்டணம் போய் என்னன்னு பார்த்துட்டு வாங்களேன்..... இந்தப் பையன் இப்படி ஒருகாரியம் செய்வானு? மத்தவங்க மனசு கஷ்டப்படுமேன்னு நினைப்பு வேண்டாமா?'' பஞ்சரத்தினம் புலம்பினள்.

''மாப்பிள்ளை மேலே குத்தமில்லே—தாமதத்தின் காரணத்தை விளக்கித் தந்தி அனுப்பிச்சிருப்பார். இப்போ தந்திதான் தாமதமாயிடுச்சு....'' அவர் சொல்லி முடிப்பதற்குள் வாயிலில் சைக்கிள் மணி ஒலித்தது.

அகல்யா ஒரே பாய்ச்சலாக விரைந்தாள்.

''அப்பா! உங்க வாய்க்குச் சர்க்கரைதான் போடணும். அவர் நாளைக்கு வரார்.'' ஆனந்தத்துடன் கூச்சலிட்டாள்.

பஞ்சரத்தினம் பரபரப்புடன் எழுந்து நின்றவள் பேச முடியாது நாற்காலியில் தொப்பென்று உட்கார்ந்து விட்டாள். அவள் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. மூச்சுத் திணறியது. (தொடரும்)

⌘ நடேஷ்கண்ணு, விளாத்திகுளம்

கே. அன்னை தெரசாவுக்கு நோபல் பரிசு கிடைத்திருப்பது பற்றித் தங்கள் கருத்து என்ன?

ப: தாய்மையான, ஸ்படிகம் போன்ற அன்னைக்குப் பரிசு கொடுத்தது மகிழ்ச்சியையும் நெகிழ்ச்சியையும் அளிக்கிறது. எம்.ஏ.எம். அறக்கொடை முதல் நோபல் பரிசு வரை எந்தப் பரிசு பற்றியும் கசமுசாக்கள் எழுவது உண்டு. ஆனால் தெரசாவுக்குக் கிடைத்த பரிசைப் பற்றி இரண்டாவது அபிப்பிராயம் கிடையாது.

சில ஆண்டுகளுக்கு முன்பு பம்பாய்க்குப் போப் ஆண்டவர் வந்த போது அவருடைய உபயோகத்துக்காக விசேஷ லிங்கன் காரை அமெரிக்கா அன்பளிப்பாக அனுப்பியது. ஊர் திரும்பும்போது அந்தக் காரை அன்னை தெரசாவுக்கு அவர் அன்பளிப்பாகக் கொடுத்து விட்டார். அன்னையோ அந்தக் காரை மூன்று லட்ச ரூபாய்க்கு விற்றுச் சேவைப் பணிகளுக்கு உபயோகித்து விட்டார்.



⌘ திருமதி விஜயாராஜன், உடுப்பி

கே. ரேடியோவில் ஒலிபரப்பு ஆரம்பம் ஆகும் போது டியூன் இசைக்கிறார்களே — அதை இசையமைத்தவர் யார்?

ப: பிரபல இசை அமைப்பாளர் ஜூபின் மேத்தாவின் தந்தை மெஹ்லி மேத்தா. டிவியின் துவக்க இசையை அமைத்தவர் ஜூபின் மேத்தா. அவர் அமெரிக்காவில் ஆர்க்கெஸ்ட்ரா வைத்துக் கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கிறவர்.

ரூ. 5 பரிசு பெறுபவர்:
**திருமதி வசந்தா கோவிந்தன்.**
**1067, ஹெச். ஏ.எல். II ஸ்டேஜ்**
**இந்திரா நகர்,**
**பெங்களூர்-**
**560 038**

⌘ ெ. பாஸ்கரன், சென்னை-34

கே. "காதல் வந்திரிச்சு" பாடலையும் தடை செய்து விட்டார்களே சார்?

ப: அமெரிக்காவில் உள்ள பாஸ்டனில் இப்படித்தான் புத்தகங்களைத் தடைசெய்வார்களாம்—அதில் ஏதாவது துளி ஆபாசம் இருந்தாலும். இதன் காரணமாகப் பல நல்ல புத்தகங்கள் கூட அங்கு தடை விதிக்கப்பட்டிருக்கின்றன. அதன் பிறகு புத்தகப் பிரசுரகர்த்தர்கள் "பாஸ்டனில் தடை செய்யப்படக் கூடிய புத்தகம்" என்று பிரசுரத்துக்கு முன்பு விளம்பரம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அதே மாதிரி நம் சினிமாத் தயாரிப்பாளர்கள், "இந்தப் படத்தின் ஆறு பாடல்களுக்கு ரேடியோவில் தடை விதிக்கக்கூடும்" என்று விளம்பரம் செய்யலாம்!



⌘ இரா. ஞானசேகரன், விஜயபுரம்

கே. ராஜாஜியிடம் உள்ள நற்குணங்களில் உங்களுக்குப் பிடித்தது எது?

ப: யார் கடிதம் போட்டாலும் கைப்பட பதில் எழுதுவார். அந்த நல்ல பழக்கத்தை நானும் பின்பற்றி எனக்கு வரும் ஆயிரக்கணக்கான ரசிகர் கடிதங்களுக்கு உடனே பதில் போடுகிறேன் (ஓர் உண்மையைச் சொல்லி விடுகிறேன்: அளப்பு என் உடன் பிறப்பு!)

⌘ வசந்தா கோவிந்தன், பெங்களூர்-38

கே. தரித்திரத்துக்கு என்ன கவலை?

ப: ஏழைமைக்குச் கவலையேது, சகோதரி. "ஊசிப் போய் விட்டது. பிச்சைக்காரனுக்குப் போடு" "உப்பு அதிகமாகப் போய் விட்டது. சாம்பாரை யாராவது ஏழைக்குக் கொடு" என்று கொடுப்பது தெரியாதா? நாம்தான் இப்படி கொடுக்கிறோமே, அதைச் சாப்பிடும் ஏழை "என்னங்க சாம்பார் கரிக்குது. உப்புமா ஊசிப் போய் விட்டதே" என்று எப்போதாவது சொல்லியிருக்கிறானா? ஏழைகளுக்கு உணர்வுகள் மட்டுமல்ல, ருசியும் மரத்துப் போய் விடும். அது அவர்கள் பெற்றுள்ள சாபம் (அல்லது வரப்பிரசாதம்!)



⌘ எ. சுதாகர் ஜேக்கப், நெய்வேலி-2

கே. உமது பதிலைப் படித்ததும் பயங்கரத் தலைவலி வருகிறதே. மருந்து சொல்லுங்கள்? (அறுக்காதீர்)

ப: தலையை மாற்றி விடுங்கள் (அறுக்காதீர். என்று உளற மாட்டேன். அறுக்காமல் மாற்ற முடியாது!)

⌘ குருபரன், கமுதி

கே. உமக்கும் சோவுக்கும் என்ன வித்தியாசம்?

ப: அவர் முழு. நான் முக்கால்!

# கற்கு பதில்கள் !

# ஒரேமனம்



## பகவத்சிங் அன்பரசு

ஆபீஸ் முடிந்து வீட்டுக்கு வந்ததும், வராததுமாய் இராமநாதனுக்கு அபிஷேகம் தொடங்கியது.

''என்ன லேட்? மணி ஆறரையாகுதே... ஆபீஸ் அஞ்சு மணிக்கே முடிஞ்சிருக்குமே? ...ம்... அவளை இழுத்துக்கிட்டு ஊர் சுத்தவேண்ணு முடியாதுங்களோ?''

அவன் மனைவி லலிதா பொரிந்து தள்ளினாள்.

இராமநாதன் பேசாமல் இருந்து விடலாம் என்று நினைத்தான். முடியவில்லை.

''ஏன் பிரமிளாவை இழுத்துப் பேசறே? உனக்கே நல்லாயிருக்கா? அவ டைப்பிஸ்ட்... நான் மானேஜர். எப்படிப் பேசிக்கிறும ஆபீஸ்ல வேலை செய்றது?''

அவனுக்கு அலுப்பாக இருந்தது.

''ஆஹாஹா.... பி..ர...மி...ளா... அவ பேரை இன்னொரு தடவை சொன்னீங்க. எனக்கு எப்படி வருது? அவ வேலையை அவ பாக்கட்டும்.. உங்களுக்கு என்ன பேச்சு? ஆபீஸ்லே ஆரம்பிச்சு வீட்டுக்கும் கொண்டாந்துட்டீங்க... அவளும் மானமில்லாம வீட்டுக்கு வந்து தொலைக்கறா.''

லலிதாவின் முகம் ஆயிரம் கோணலாக மாறியது.

லலிதாவின் இயல்பு அவனுக்கு நன்றாகத் தெரியும். அவள் கோபத்துடன் பேச ஆரம்பித்தால் யார் சொல்வதையும் காதில் போட்டுக் கொள்ள மாட்டாள். எதிரில் யார் இருந்தாலும் அவளுக்குத் துரும்புதான்.

''என்ன சொன்னாலும் நீ கேட்க மாட்டே. இப்ப உனக்குக் கொஞ்சநாளா இதேவேலையா போச்சு. நான் சொல்லிச் சொல்லிச் சலிச்சுப் போச்சு. ஆனா நீ விட மாட்டேங்கறே... உன்னைக் கல்யாணம் பண்ணிக் கிட்டதுக்கு மரத்திலே தூக்குப் போட்டுத் தொங்கியிருக்கலாம்.''

அவன் விரக்தியடைந்தவன் போல் பேசினான்.

''இப்ப வேணுமின்னாலும் போய்த்தொங்குங்களேன் யார் பிடிச்சிக்கிட்டிருக்கா?''

அவள் சளைக்கவில்லை.

''உனக்கு இரக்கமே இல்லியா?''

அவன் கெஞ்சினான்.

''உங்களுக்குத்தான் இரக்கம் வேணும். வீட்டிலே ஒருத்தி இருக்காளே. இப்படியெல்லாம் நடந்துக் கிட்டா மனசு கஷ்டப்படுவாளேன்னு நினைச்சுப் பார்க்கணும்.''..

அவளுக்கு வேகம் சற்றுத் தணியத் தொடங்கியது. குரல் கம்மிக் கெஞ்சுவது போல் சொன்னான்.

''எனக்கு வயசு நாப்பது ஆகுது. இந்த வயசிலே நான் தப்புப் பண்ணுவேனா? நீ ஏன் வீணா சந்தேகப்படுறே?''

அவளுக்கு முகம் பிரகாசித்தது.

''இந்த வயசிலேதான் ஆசை அதிகமாகுமாம்.''

அவள் கோபமும் சிரிப்புமாய்ச் சொன்னாள்.

''நீ விட மாட்டியே.''

அவன் சிரித்துக் கொண்டான்.

''எப்படி விடுறது? எனக்குப் பிள்ளைங்க இருந்தா அதுங்க என்னைக் கவனிக்கக்கும். எனக்கு இருக்கிறது நீங்க மட்டும்தான். நீங்களும் என்னை விட்டுட்டா....''

அவள் அழுவது போல் பேசினாள்.

''ஏன் இப்படி மனசை அலட்டிக்கிறே?''

''பின்னே ஏன் தினம் லேட்டா வர்றீங்க?''

''இனிமே லேட்டா வர மாட்டேன்... ஆபீஸிலே வேலை இருந்தாலும் இல்லாட்டாலும் வந்திர்றேன்.''

''இவ்வளவு சொன்னப்பறம்தான் உங்களுக்குத் தெரியுதாக்கும்.''

''சரி....சரி....விடு....''

''அவளோட பேசாம, பழகாம இருக்கணும், என்ன?''

அவள் சிணுங்கிக் கொஞ்சினாள்.

''நாளைக்கிருந்து பேசலே,,, பழகலே... அவளைக் கூப்பிட்டுக் கண்டிச்சுச் சொல்லிடறேன்.. வீட்டுக்கும் வர வேண்டாம்னு உறைக்கிற மாதிரி சொல்லிடறேன். போதுமா?''

அவளுக்கு வெற்றிப் புன்னகை அரும்பியது.

''சரி முகம் அலம்பி, சீக்கிரமா டிரஸ் பண்ணுங்க. நானும் டிரஸ் பண்ணிட்டு வந்திடறேன்... வெளியே போகணும்...''

''முதல்லே காப்பிகொடு லலிதா..அலுப்பா இருக்கு.....'' அவன் பரிதாபமாய்க் கேட்டான்.

காலை. இராமநாதன் ஆபீஸுக்குப் போய் விட்டான். லலிதா அடுப்படியில் வேலையாயிருந்தாள்.

வெளியே குரல் கேட்டது.

லலிதா எட்டிப் பார்த்தாள். வாசலில் பிரமிளா நின்றிருந்தாள். அவள் முகம் வாட்டம் அடைந்திருந்தது.



லலிதா ஹாலுக்கு வந்து அவளை ஏற இறங்கப் பார்த்தாள்.

பிரமீளா தயங்கித் தயங்கி உள்ளே வந்தாள்.

லலிதா எப்படிப்பட்டவள்?

''எதுக்கு வந்தே?''

எடுத்த எடுப்பிலேயே சூடாக ஆரம்பித்தாள்.

''அவர்....அவர்....''

பிரமீளா பேசப் பயந்தாள்.

லலிதா தலையை உயர்த்தினாள்.

'இவளுக்கு என்ன திமிர் அவர் அவர் என்று உரிமை கொண்டாடுகிறாளே' என்று மனத்தில் கறுவிக் கொண்டாள்.

''என்ன முளிக்கிறே?''

''அவர் கூப்பிட்டுத் திட்டிட்டார். என்னையும் அவரையும் நீங்க சந்தேகப் படுறீங்களாம்.....''

பிரமீளா மிரள மிரள விழித்தாள்.

''என்னடி முளிக்கிறே? முளிக்கிற முளியைப் பாரு. திருட்டு முளி... ஊரிலே கன்னு பின்னுன்னு பேசறது உன் காதிலே விழலியா? நீதான் எல்லாத்தையும் உதுத்தவளாச்சே. உனக்கென்ன? கல்யாணம் பண்ணின ஆம்பிளையோட உனக்கென்னடி பேச்சு?''

லலிதா கோபத்தில் எல்லை மீறினாள்.

பிரமீளாவுக்கு லலிதாவின் சொற்கள் அம்பாக நெஞ்சில் தைத்தன. அவளுக்கு அழுகை பொங்கியது. ''நான் அனாதைங்க.''

''அதனாலே தான்டி கேக்குறதுக்கு ஆளில்லேன்னு உன் இஷ்டத்துக்குத் திரியறே.''

பிரமீளா அழுது விட்டாள்.

''ஏன்டி இங்கே வந்து அழறே?''

லலிதா தணியவில்லை.

''நீங்க சந்தேகப்படுற மாதிரி நான் கெட்டவ இல்லீங்க. ஆபீஸ்லே வேலை பாக்கிறவங்க தொல்லைக்குப் பயந்து, இப்படி நடந்துக்கிட்டேன். என்னைத் தப்பா நினைக்காதீங்க.''

பிரமீளா அழுதவாறு சொன்னாள். ஒரு நொடியில் லலிதாவுக்கு என்னமோ போல் ஆகிவிட்டது.

''என்ன சொல்றே?''

''ஆபீஸ்லே வேலை பாக்கிறவங்க லெட்டர் கொடுக்கிறாங்க. வீட்டுக்கு வந்து தொல்லை கொடுக்கிறாங்க. அனாதைங்கிறது

ளுலே கேவலமா நினேக்கிறீங்க: அதனுலே பெரிய ஆபீஸர்கிட்டே பழக்கம் இருக்குன்னு யாரும் அண்டமாட்டாங்கன்னுதான் பழகி னேன். அவரும் நல்லவர். நீங்களும் நல்ல வங்க... அதனுலேதான் எதுக்கோ பழக ஆரம்பிச்ச நான் சொந்த அக்கா, மாமான்னு உரிமையா பழகிட்டேன். தப்பா இல்லீங்க. என்னே மன்னிச்சுருங்க....''

பிரமிளா சற்றுப் பயம் தெளிந்து விஷ யத்தைத் தெளிவாக்கினுள்.

லலிதாவுக்கு எல்லாம் தணிந்தது. திடீ ரென்று அன்பு பெருக்கெடுத்தது.

''வாடி கண்ணு ரொம்பக் கஷ்டப்பட் டிருக்கியே.. எனக்குத் தெரியாம நானும் கஷ்டப் படுத்திட்டேனே...''

லலிதா பிரமிளாவிடம் போய் ஆறுத லாகக் கண்களைத் துடைத்து விட்டாள்.

பிரமிளாவுக்கு ஒன்றும் புரியவில்லே.

''ஆபீஸ்லே பொம்பள ஒருத்தி இருந்தா வேலே பாக்கவிட மாட்டானுங்களே... காலிப் பசங்க....''

லலிதா தனக்குத் தானே சொல்லிப் பொருமினுள்.

''ஏண்டி இதை இத் தனே நாளா என் கிட்டே சொல்லலே? சொல்லுடி யார் அந் தக் காலிப் பசங்க? சீட்டு கிழிக்க வைக்கி றேன்.''

பிரமிளாவுக்குச் சந் தோஷமா யிருந்தது. லலிதா அவள் கூந்த லேக் கோதி விட்டாள். ''பிரமிளா நான் பேசி னதைப் பெரிசா எடுத் துக்கிருதே. அக்கா கோவிச்சான்னு நினேச் சுக்க... என்னடி?''

லலிதா ஆறுதல் சொன்னுள்.

பிரமிளா தலையாட்டி னுள்.



''உங்க நான்கு பெண்களுக்கு ராகத்தோட பெயர்களேயே வைத்திருக்கீங்களே! ஐந்தாவதாகப் பிறந்த பெண்ணுக்கு என்ன பெயர்?''

''மத்திமமாவதி''

—வசந்தாகோவிந்தன்

''நீ அக்கா வீட்டிலே இருந்துக்கோ... தனியே ஏன் இருந்து கஷ்டப்படுறே? மாமா வரட்டும் சொல்லிடறேன்.''

பிரமிளாவுக்கு உள்ளத்தில் மகிழ்ச்சி நடுக் கம் தோன்றியது. ''வேண்டாம்.''

''அப்படிச் சொல்லாதடி கண்ணு. இருக் கேன்னு சொல்லு... கோவிச்சுக்காதே...''

லலிதா அன்பைப் பொழிந்தாள்.

பிரமிளாவுக்கு ஒரே வியப்பு. புயலும் தென்றலும்தான் லலிதாவா?

**மா**லே. இராமநாதன் ஆபீஸ் முடிந்து வீட்டுக்கு வந்தான். அவன் கண்களில் பிர மிளாதான் தட்டுப்பட்டாள்.

அவனுக்குப் பிரமிளா மேல் கோபம் கோப மாக வந்தது. சிறிது நேரத்தில் காப்பி டம்ள ருடன் லலிதா வந்தாள்: அவள் முகத்தில் கனிவு புன்னகையாய் அரும்பியிருந்தது.

இராமநாதன் புரியாமல் இருவரையும் மாறி மாறிப் பார்த்து விழித்தான்.

லலிதா நடந்த தெல்லாவற்றையும் முறை வாக அவனிடம் எடுத்துச் சொன்னுள்.

''நீயா குதிக்கிறே... நீயா குழையறே... என்னே என்னுன்னு நினேச்சுக்கிட்டிருக்கே?''

இராமநாதன் குரலில் கடுமை தொனிக் கப் பேசினுன்.

''ஸ்...ஸ்... மெதுவா பேசுங்க. இப்ப என்ன செஞ்சுட்டேன்? ஏன் கோபப்படு றீங்க?''

லலிதா குழைந்தாள்.

''வீடுன்னு நினேச்சியா? அனுதை ஆசி ரமம்னு நினேச்சியா? கண்டவங்களே வீட் டிலே கொண்டாந்து வச்சிக்கிறதுதான் நல்ல காரியமோ?''

''என்ன மேலே போறீங்க? கண்டவங்க அப்படி இப்படின்னு கிட்டு.. அவ என் தங் கச்சி. இந்த வீட்டிலே தான் இருப்பா. சத் தம் கித்தம் போட்டீங்க. அப்புறம்...''

லலிதா மறு அவதாரம் எடுக்கத் தொடங் கினுள். இராமநாதன் திடுக்கிட்டான்.

''லலிதா ஆரம்பிச் சிராதே. நீ குழைய றேன்னு கொஞ்சம் சத் தம் போட்டா நீ குதிக்க ஆரம்பிக்கி றியே,....''

அவன் விழுந்து விட் டான்.

''நீங்க யாருனு தெரியாதா? குதிச்சா கொஞ்சுவீங்க..கொஞ் சினு குதிப்பீங்க...''

''நீயும்தான் குதிக் கிறே.''

''அப்புறம்?''

அவன் அவளே நாணப் புன்னகை யுடன் பார்த்தான்.

''கொஞ்சவே. இப்ப, கொஞ்சுறமாதிரி.''

அவன் புன்னகைத் தான்.

''இனிமே பார்த்துப் பேசுங்க., வீட்டிலே மச்சினி இருக்கா....''

பிரமிளாவுக்குச் சிரிப்பு வந்தது. உள்ளுக் குள் சிரித்துக் கொண்டாள்.

திடீரென்று பிரமிளா சத்தம் போட்டாள்; ''பேசிக்கிட்டே நிக்கணுமா?''

இருவரும் ஒரே சமயத்தில் திரும்பி அவ ளேப் பார்த்தனர். ''நீ ஏண்டி குதிக்கிறே?'' லலிதா இடுப்பில் கை வைத்தவாறு கேட் டாள்.

''உன் தங்கச்சியாச்சே.''

இராமநாதன் கேலி செய்தான்.

பிரமிளாவுக்கு வெட்கம் வந்தது.

''ம்....வாங்க... டிபன் இருக்கு. சாப்பிட் டுப் பேசிக்கலாம்....''

பிரமிளா குழைந்தாள். அவளுக்கு வெட் கத்தால் நிற்க முடியவில்லே. உள்ளே ஓடினுள்.

இராமநாதன் ''என்ன இது? நம்ப கேலா இருக்கு. குதிக்குது; குழையுது'' என்றுன்.

''போங்க!'' லலிதா நாணினுள்,

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

"ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவின் துன்பங்களிலிருந்து விரைவில் நிவாரணம் பெற அனாஸின் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் நாட்டாலியா டிசௌஸா.



**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ, சத்துக்குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப்பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப் புண், பசியின்மை, உடல் சோர்வு தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும், சுவாசகோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம் ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள். ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்யவேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.



சக்தி வாய்ந்த நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd. TM

A24-6/79.



# கல்கி

சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

மானேஜர்

கல்கி, சென்னை-600 032

வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயில் ஆச்சுதடி! – அக்கச்சி
மயில்குயில் ஆச்சுதடி!

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றுடும்
வள்ளலைக் கண்டேனடி! – அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி!

— திருஅருட்பா

பட்டுப் புடவையைப் பிரித்துப் பார்த்தாள் கமலா. விலை இரண்டாயிரத்துக்கும் மேலே. புடவை அருகே மயில்கண் வேஷ்டி. மானஸீகமாகக் கணவனுக்கு அதை உடுத்தி அழகு பார்த்தாள். மனம் நிறைந்தது. புடவையைத் தோளில் போட்டுக் கொண்டு அழகு பார்த்தாள். பருத்த உடம்புக்குச் சற்று எடுப்பாக இல்லை போல் தான் இருந்தது.

அவர்களுக்குத் திருமணமாகி இருபத்தைந்து வருடமாகப் போகிறது. அதைக் கொண்டாடத்தான் ஏற்பாடுகள் செய்கிறார்கள். கமலாவுக்குப் பதினைந்து வயதில் கல்யாணம். அவளுக்கு இப்போது நாற்பது வயதாகிறது. அவளுக்கும் கண்ணனுக்கும் ஐந்து வயது வித்தியாசம்.

கல்யாணமான மறு வருடமே ரமா பிறந்து விட்டாள். ரமாவுக்கும் கல்யாணமாகி மூன்று வயதில் பேத்தி பிறந்தாகி விட்டது. ரமாவுக்கு அடுத்தவன் — இடைவெளி நான்கு வயது. மெடிகல் காலேஜில் படிக்கிறான். குடும்பம் அளவோடு என்றாலும் நான்கு கருச் சிதைவுகள் ஏற்பட்டுக் கமலாவின் உடம்பைப் பாழ்படுத்தி விட்டன.

கண்ணனின் இளமை கமலாவுக்குத் தோற்றத்தில் இல்லை. கண்ணன் திருதிருவென்று தேக்கு மரத்தின் உறுதியாக நின்றான். ஆரோக்கியம்கூட ஒரு சௌபாக்கியம்தான். கமலா பார்க்க அப்படி இருந்தாலும் கூட வசதியான வாழ்வு வளத்தைக் கொடுத்தது. அதுவேகூட ஒரு தேஜஸாக இருந்தது.

''என்ன கமல், புடவையைப் பார்த்தே மகிழ்ந்து கொண்டிருக்கிறாயே? காப்பி ஏதாவது உண்டா? எனக்கு வெளியே போக வேண்டும்'' — ஒருவரும் இல்லை என்ற துணிவில் கன்னத்தில் தட்டினான்.

அவள் உள்ளே போய்க் காப்பியைக் கொண்டுவந்தாள். உடம்பைக் குறைத்தால் இன்னும் நன்றாக இருப்பாள் என்று எண்ணினான் கண்ணன். கமலாவால் டயட்டில் இருக்க முடியாது.

மாதங்களும் நாட்களும் ஓட்டப் பந்தயம் வைத்து ஓடிக் கொண்டிருந்தன. இருபத்தைந்து ஆண்டுகள்ஆன 'வெட்டிங் அனிவர்ஸரி கொண்டாடி ஆறு மாதங்கள் ஆகி விட்டன.

ஒரு நாள் பிற்பகல் கமலாவுக்கு போன் வந்தது. கம்பெனி விஷயமாகக் கமலாவின் அத்திம்பேர் கல்கத்தாவிலிருந்து வந்திருந்தார். கம்பெனியே அவர் தங்கும் வசதிகளைக் கவனித்துக் கொள்வதால் ஹோட்டலிலேயே தங்கிக் கொண்டு விடுவார். கமலாவைப் பார்க்க வருவார். இன்று அவர்தான் வந்திருந்தார்.

''கமலா, வீட்டுக்கு வரமுடியாது இந்தத் தடவை. கண்ணன் சௌக்கியம்தானே? நீ இங்கே வா. உன் அக்கா ரஸகுல்லா, நீ கேட்ட சங்கு வளையல்கள் எல்லாம் கொடுத்து அனுப்பியிருக்கிறாள். நான் இப்படியே பாம்பே போகிறேன். நீ இப்பவே கிளம்பி வாம்மா'' என்றார் அத்திம்பேர்.

கமலா உற்சாகத்துடன் கிளம்பினாள். அக்கா அவள் கேட்ட சாமான்களைக்கொடுத்து அனுப்பி விருக்கிறாள். அந்த மகிழ்ச்சி பீறிட்டது. கண்ணனுக்குப் போன் செய்தாள். ஆனால் அவன் இல்லை.



அது ஐந்து நட்சத்திர ஹோட்டல். ரிஸப்ஷனில் அறை நம்பரைக் குறிப்பிட்டு விசாரித்தாள். லிப்டில் நாலாவது மாடியை அடைந்தாள். லிப்டிலிருந்து வெளியே வந்து வராந்தாவில் நடந்ததும் — ஓ.... வராந்தாவின் திருப்பு முனையில் கண்ணன் மாதிரியே, வளையாத முதுகு, கருங் முடி, சைட் பர்ன்ஸ்— ஆனால் அருகில் ஒரு பெண்! கண்ணனாக இருக்குமோ?

அவள் வேகமாக நடந்து சரியாகப் பார்ப்பதற்குள் அவர்கள் மறைந்து விட்டனர். அவள் மேலும் சிறிது தூரம் போய்ப் பார்த்தாள். அங்கே நீள வராந்தாவில் ஏதோ ஒரு பார்ட்டி கொடுக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. வந்தது கண்ணனா? அத்திம்பேர் அவனுக்கும் போன் பண்ணி



## ஆயிரம் இருக்கும்!

இரண்டு பேருக்கிடையில் காரசாரமான விவாதம்.... விவகாரம் முற்றும் அபாயம்....

அந்தப்பக்கம் வந்த அரியக்குடி ராமானுஜ அய்யங்கார், ''என்ன விஷயம்?'' என்று கேட்டார். விவகாரத்தில் ஒருவருக்கு அவர் தலையிட்டதில் இன்னும் கோபம். ''எங்களுக்குள் ஆயிரம் இருக்கும் உங்களுக்கென்ன?'' என்று சீறினார்.

உடனே அரியக்குடி, ''அவ்வளவு தானே ஆயிரம் இருந்தால் ஆளுக்கு ஐநூறாக எடுத்துக் கொள்ள வேண்டியது தானே? இதிலென்ன சண்டை?'' என்று போட்டார் ஒரு போடு!

—ஆர். பி. சாரதி

இருப்பாரோ? அப்படியானால் கூட வந்த பெண்? அவள் குழம்பிப் போனாள்.

அத்திம்பேரின் பேச்சு ரசிக்கவில்லை. ரஸகுல்லாவும் சங்கு வளையல்களும் மகிழ்ச்சி தரவில்லை. கண்ணன் தன்னுடைய கட்டுக்குலையாத அழகுக்குத் துணையைத் தேடுகிறானா? அவனுடைய கேலிகள் வெறும் அன்பில் கனிந்தவை யல்ல. மனக் குறையில் விளைந்தவைகளா?

வீட்டுக்கு வந்த பிறகும் அவளால் தாங்க முடியவில்லை. கண்ணன் வந்தால் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? இனிமேல் சண்டை போட்டு ரஸாபாஸமாக ஆக்குவதா? உடற்கூறுகளைக் கற்று மருத்துவம் பார்க்கப் பயிலும் மகன் எதிரே அற்ப விஷயத்துக்குச் சண்டை போடுவதா? நல்ல பேச்சில்தான் திருப்ப வேண்டும். கண்ணனுக்கு அதிக கவர்ச்சி, சாகஸமான பேச்சுக்கள் தேவை!

இரவு கண்ணன் வந்ததும் அவன் புன்முறுவலுடன் வரவேற்றாள். சாப்பாட்டின் போது அவள் சுக்கா ரொட்டியை மட்டும் சிறிது சப்ஜி கூட சாப்பிட்டாள். இது கண்ணனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''என்ன கமல், ஆச்சரியமாக இருக்கிறதே? சம்பாதிப்பது எதற்கு? நன்றாகச் சாப்பிடத் தானே என்று என்னைக் கேட்பாய்! நீயா இதைச் சாப்பிடுகிறாய் '' என்று கேட்டான்.

''ஆமாம்; நான் என் உடம்பைப் பெருக்க விடாமல் இருக்க முடிவு செய்து விட்டேன்.''

''குட்! நல்ல ஐடியா. இப்பொழுதாவது ஞானோதயம் வந்ததே!''

அவள் அவன் பார்க்காதபோது கேலிப் புன்னகை புரிந்தாள். இளமையை நாடும் அவன் மனம் புரிந்து விட்டதே!

கமல் இப்பொழுது நன்றாக இளைத்துக் கொண்டு வந்தாள். கண்ணனைப் பற்றிய மன வருத்தம் சற்றுச் சோர்வை உண்டாக்கியது. ப்யூட்டி பார்லரில் போய் அழகுக் கலையைக் கற்று வரத் தொடங்கினாள். தன்னை அழகாக ஒப்பனை செய்துகொள்வதுடன் வீட்டையும் அழகுபடுத்தினாள்.

''என்ன கமல், உன்னையும் உன் சுறுசுறுப்பையும் பார்த்தால் உனக்கு நாற்பது வயது என்றே சொல்ல மாட்டார்கள். புதுப் பெண்ணின் சுறுசுறுப்பாக இருக்கிறாயே!''

கமலா பூரித்துப் போனாள்.

'அடல்ட் எஜுகேஷன்' ஸ்கீமுக்காக ஒரு கருத்தரங்கம். அதில் கமலா சேர்ந்துள்ள மாதர் சங்கமும் பங்கு பெற்றது. நிகழ்ச்சிகள் முடிய மாலையாகி விட்டது. சிலர் பக்கத்தில் உள்ள ஹோட்டலுக்குள் நுழைந்தனர். கமலா வர மறுத்தாள். அவளை வலுக் கட்டாயமாக இழுத்துக் கொண்டு போனார்கள்.

நீண்ட ஹாலில் கோடியில் ஓர் ஓரமாக அமர்ந்து அவள் வருவதைக் கவனிக்காமல் கண்ணன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான் ஒரு பெண்ணுடன். ஐந்து நட்சத்திர ஹோட்டலில் கண்ணனுடன் வந்த அதே பெண்! அதிர்ந்து நின்றாள் கமலா.

ஒரே கணம். தன் ஃப்ரண்டைக் கூப்பிட்டு ''எனக்குத் தலையைச் சுற்றுகிறது. ஒன்றும் சாப்பிடும் நிலையில் இல்லை'' என்று கூறிவிட்டு வெளியே வந்துவிட்டாள்.

இரவு முழுதும் அவளுக்குத் தூக்கமே வரவில்லை. கண்ணன் அவளை நெருங்கிய பொழுதும்கூடப் பேசப் பிடிக்கவில்லை.

அன்று மாதர் சங்க ஆனிவர்ஸரி டே. இரவு திரும்ப நேரம் ஆகும் என்று காலையிலேயே கண்ணனிடம் கூறியிருந்தாள் கமலா. அன்று நடுப்பகல் கண்ணனுக்குத் தலைவலி அதிகமாக இருந்தது. ஜுரம் வரும்போல் இருந்தது. அதனால் வீடு திரும்பி விட்டான். ஒரு மாத்திரையுடன் காப்பியையும் குடித்து விட்டு வந்தான் மாடிக்கு.

அறையினுள் நுழைந்தபோது மேஜையின் மீது தபாலில் சேர்க்கப்பட வேண்டிய கடிதம் ஒன்று காத்திருந்தது. ஓ.... கமலா மறந்து போய் வைத்திருக்க வேண்டும். கடிதத்தைக் கையில் எடுத்தான். ஒட்டப்பட்டிருக்கவில்லை.

முகவரியில் 'கார்த்திக்' என்ற பெயர்!

'கார்த்திக்!' நினைவில் அந்தப் பெயரைத் தேடினான். அவனுக்கு அந்தப் பெயரில் உறவினன் யாரும் இல்லை. ஒட்டப்படாத கடிதம்தானே என்று பிரித்தான். கமலா தான் எழுதியிருந்தாள்!

'அன்புள்ள கார்த்திக்!

உன்னைச் சந்திக்க ஆவலாக இருக்கிறேன் என்று எழுதியிருந்தீர்கள். இந்தத் தவிப்பின் பிரதிபலிப்பு என்னிடமும் இராதா என்ன? எங்கே சந்திப்பது என்பதை எழுதினால் உடனே வருகிறேன்.

தங்கள் கமலா.'

இரவு கமலா திரும்பும்போது மணி எட்டாகி இருந்தது. அறையினுள் சன்ன நீல விளக்கு பூவாக மலர்ந்திருந்தது. கண்ணன் தலையைத் திருப்பிப் பார்த்தான்.

''என்ன படுத்துக் கொண்டு விட்டீர்கள்? டிபன்கூடச் சாப்பிடவில்லை போல் இருக்கிறதே!''

கண்ணனின் கண்களில் ஜுர வேகம். கையில் வைத்திருந்த கவரை வீசி அவள் மேல் எறிந்தான்.

''உன் உபசாரத்தை எல்லாம் இவனிட்டே வைத்துக்கொள்.''

அறையில் ஏ. ஸி. ஓடினாலும் கமலாவுக்கு வியர்த்தது. கைக்குட்டையால் நெற்றியை ஒத்திக் கொண்டாள்.

''நீ உன் காதலனுக்கு எழுதித் தபாலில் சேர்க்க மறந்த கடிதம்.''

கமலா இளநகையை இதழ்களில் ஓட்டினாள்.

''இதற்கா இவ்வளவு கோபம்?''

அவன் பற்களைக் கடித்தான். ''என்ன கேட்டாய் இதற்கா இவ்வளவு கோபம் என்று? நீ எப்படிப்பட்ட தவற்றைச் செய்திருக்கிறாய் என்பதை உணரவில்லையா?''

''உங்களுக்கும் எனக்கும் எவ்வளவு வயது வித்தியாசம்?''

''ஐந்து.''

''உங்களைவிட ஐந்து வயது குறைவான நான் — நீங்களே இளமையைத் தேடிப் போகும்போது நான் ஏன் போகக்கூடாது? இதில் தப்பு ஒன்றுமில்லையே?''

''என்ன உளறுகிறாய்?''

''நான் ஒன்றும் உளறவில்லை'' என்ற கமலா, அவனை ஒரு பெண்ணுடன் பார்த்த சம்பவங்களை யெல்லாம் சொன்னாள்.

''அதற்காக?'' என்று கேட்டான் கண்ணன்.

''வேறு துணையைத் தேடிப் போக வேண்டாம் என்று எச்சரிப்பதற்காகப் பொய்யாக ஒரு கடிதத்தை எழுதி வைத்தேன்.'' — கமலா கேவினாள்.

இடி இடி என்று நகைத்தான் கண்ணன்.

''மாதர் சங்கத்துக்குப் பிரசிடெண்ட் ஆனால் என்ன, எப்படிப்பட்ட வசதியுடையவள் ஆனால் என்ன? பெண்கள் பொறுமைக்காரர்கள் என்பதை நிரூபித்து விட்டாய்.''

''கணவன் எங்களுக்குச் சொந்தம் என்பதில் நாங்கள் பெரிய பொறுமைக்காரிகள் தான்'' என்று நொடித்தாள் கமலா.

''ஐந்து நட்சத்திர ஹோட்டலில் எங்களைப் பார்த்தாயே அது உண்மைதான், எங்கள் அலுவலக செமினார், பார்ட்டி எல்லாம் பெரிய அளவில் நடப்பதைப் பார்க்காதது உன் தப்புத்தான்.''

''சரி, ஹோட்டலில் ஏன் டிபன் சாப்பிட வேண்டுமாம்?''

''ஏர் போர்ட் போக வேண்டும். அமெரிக்காவிலிருந்து மிஸ்டர் ஜான் வருவதாக இருந்தது. ப்ளேட் மூன்று மணி நேரம் லேட். அதனாலே டிபன் சாப்பிட ஹோட்டலுக்குப் போனோம். அப்பப்பா! ஒரு பெண் பி.ஏவை வைத்துக் கொண்டால் மனைவிக்கு என்னென்ன பதில்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது!''

எழுந்து வந்தவன் கமலாவை அணைத்துக் கொண்டான்.

''மன்னித்துக் கொள்ளுங்கள். அடிக்கடி இளமை, அழகு என்று நீங்கள் பேசுவதால் தப்பாக நினைத்து விட்டேன்.''

''எப்படியோ நீ இணைந்து விட்டாய். அது போதும்! நாம் இளம் செடிகள் அல்ல; மரங்களாய் வளர்ந்து விட்டோம். அதனால் என்ன? இதிலும் ஓர் அழகு இருக்கிறது கமலா! பரஸ்பரம் அன்பு இருந்தால் நாம் இளமையைத் தேட வேண்டிய அவசியமில்லை.''

கமலா தன் கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டாள்,



**ஒரே கச்சேரி, இரு இடங்களில்!**

கோத்தமங்கலம் சுப்பு வீட்டில் வருடா வரும் புரட்டாசி சனி தோறும் ஒரு கச்சேரி நடக்கும்.

சுப்பு மயிலாப்பூர் அப்பர்சாமி கோயில் தெருவில் குடியிருந்தபோது, ஒரு சனிக்கிழமை மதுரை மணி ஐயரின் கச்சேரிக்கு ஏற்பாடு செய்து விட்டார்.

கச்சேரியும் இரவு ஏழுமணிக்குத் தொடங்கி விட்டது....

எட்டுமணியளவில் தெருவில் நடக்க முடியவில்லை, வீட்டுக்குள்ளும் கூட்டம் கட்டுப்படுத்த முடியவில்லை...

உடனே ஆலிவர் ரோட்டில், (இன்றைய மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் க்ளப் இருக்கும் இடம்) ஒரு பழைய பங்களாவில் கச்சேரியை மாற்ற முடிவாயிற்று!...

மதுரை மணி மகிழ்ச்சியுடன் சம்மதித்தார்.

முன்பாதி அப்பர்சாமி கோயிலிலும்; பின்பாதி ஆலிவர் ரோடு பங்களாவிலுமாக இசையரங்கை முடித்தார்!....

[பாடகர் எம். ஏ. ஜெயராமன் சொல்லக் கேட்டு எழுதியவர்:

-ஏ சுவாமிநாதன்]

# X-RAY ராஜ் நாராயண்

திரு காமராஜ் அவர்களை 'King Maker' என்று குறிப்பிடுவது உண்டு. இரண்டு பிரதம மந்திரிகளின் வீழ்ச்சிக்குக் (இதுவரை)! காரணமான திரு ராஜ் நாராயணனை 'King Breaker' என்று அழைப்பதில் தவறில்லைதான்!

எதிர்த்து நின்று எகிறிக் குதித்து இந்திராவை இறக்கி விட்டு மொட்டை அடித்துக் கொண்ட இவர், மொரார்ஜியுடன் இருந்து குழி பறித்த வெற்றியைக் கொண்டாடவும் மொட்டை அடித்துக் கொண்டவர்.

வயது முதிர முதிர, முதிர்ச்சியான மனப்பக்குவமும், கண்ணியமான செயல் திறமையும் தானே வளரும் என்று எவரேனும் நம்புவார்களானால் தயவுசெய்து மாற்றிக் கொள்ளவும். உத்தரப் பிரதேசம் பனாரஸைச் சார்ந்த திரு ராஜ்நாராயணனுக்கு வயது 62 ஆகிறது.

ராம் மனோஹர் லோஹியாவிடம் அரசியல் பயின்றவரும், சௌத்ரி சரண் சிங்கின் ஆத்ம சிநேகருமான இந்த சோஷலிஸ ஆதரவாளருக்குத் தமது குரு சரணைப் போலவே பிடிக்காத ஒரு விஷயம் தொடர்ந்து ஒரே கட்சியில் இருப்பது!

சோஷலிஸ்டு கட்சி, S. S. P., B. L. D. ஜனதா, ஜனதா (S), லோக் தளம் என்று இவர் இங்குமங்குமாய்க் கட்சிமாறும் வேகத்தைக் காணும் போது, இவர் மட்டும் கிரிக்கெட் ஆட்டக்காரராக இருந்திருந்தால் என்னமாய் ரன்கள் எடுத்திருப்பார் என்று எண்ணத் தோன்றுகிறது.

பதவியில் உட்கார்ந்து பொறுப்புடன் செயல்படுவதைவிட வெளியில் இருந்து கூச்சல் போட்டு பயமுறுத்திக் காரியங்களைச் சாதித்துக் கொள்வதுதான் சரியான வழி என்பது போல் இவர் நடந்து கொள்வதால் மனிதருக்குள் 'ஏதோ காம்ப்ளெக்ஸ்' இருக்கலாம்.

1973-ல் சரண்சிங்கிடம் தீட்சை வாங்கிய நாளிலிருந்து குரு எட்டி உதைத்தாலும், விடாமல் காலைப் பிடித்துக் கொண்டு, அவரைப் பிரதம மந்திரி அரியாசனத்தில் அமர்த்த ராஜ்நாராயணன் செய்த செயல்கள் சாதாரணமானவை அல்ல!

தனக்குச் செய்த பேருதவிக்காக சரண் இவரை 'லோக்தள்' கட்சியின் செயல்படு தலைவராக (Working President) ஆக்கி இவரது மற்ற நடவடிக்கைகளைக் 'கண்டு கொள்ளாமல்' இருக்கிறார்.

இந்திரா ஜனநாயக எதிர்ப்பு சக்திகளின் பிரதிநிதி, மொரார்ஜி சர்வாதிகாரத்தின் பிரதிநிதி, வாஜ்பாய் மதச்சார்பு சக்திகளின் பிரதிநிதி, பகுகுணா ரஷ்யாவின் பிரதிநிதி, ஜெகஜீவன் அமெரிக்காவின் பிரதிநிதி — இப்படியாகச் சப்பளாக் கட்டை தட்டிக் கொண்டு குருவுடன் உபன்யாசம் செய்யும் ராஜ் நாராயணன் படிப்பதுதான் ராமாயணம்... இடிப்பது என்னவோ ராமர் கோயில்தான்!

சில உதாரணங்கள்.

இந்திரா பிடிக்காது. சரண் சிங் மந்திரிசபை அமைக்க மட்டும் இந்திரா ஆதரவு பிடிக்கும். சஞ்சய் எதிரிதான் ஆனால் இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சரிக்கட்ட சஞ்சயின் உதவி பிடிக்கும். நேரு பிடிக்காது. சரணின் ஆட்சி நிலைக்க, நேருவின் வாரிசுகளாகத் தங்களை நினைத்துக் கொண்டிருக்கும் காங்கிரஸ் (U) பிடிக்கும்.

எவராக இருக்கட்டும் அவர்கள் சரணை ஆதரித்து விட்டால் 'கங்கை'யில் மூழ்கி எழுந்து பாபம் தீர்ந்தது போல் ஆகி விடுவார்கள், ராஜ் நாராயணனின் அகராதிப் படி!

— பி. ரங்கநாயகி





# முற்றுப் பெறாத வாக்கியங்கள்..

மதனு மிருத்யுஞ்சயன்

## அத்தியாயம் 7

விநோத் நேராக மெஜஸ்டிக் சர்க்கிள் போனான்.

நாலு தெருக்கள் தள்ளி ஒரு சாதாரண மான லாட்ஜைத் தேர்ந்தெடுத்து டபிள் பெட் அறை ஒன்றை எடுத்துக் கொண்டான். மூட்டைப் பூச்சிக் கட்டில். கட்டில் மேல் போடப்பட்டிருந்த 'பெட்'டில் ஆயிரம் கறைகள். உடைந்த நாற்காலி ஒன்று. மேஜை இல்லை. தரித்திரக் களை சொட்டிற்று. டபிள் ரூமுக்கே வாடகை ஒரு நாளைக்குப் பத்து ரூபாய்தான். ஹோட்டல் ரிசப்ஷனில் போன் இருந்தது. ரிசப்ஷனிலிருந்து 'செவன் ஹெவனுக்கு'ப் போன் செய்து 109 நம்பர் ரூமுக்கு கனெக்ஷன் கேட்டான். ஆள் இல்லை, வெளியே போய் விட்டதாகத் தகவல் வந்தது.

அருண் தன்னைத் தேடிக் கொண்டுதான் மல்லேஸ்வரம் போயிருப்பான் என்று முடிவு செய்தான்.

பெங்களூர் சிடி மெயின் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ச் சென்னையிலிருந்து தனக்கு ஏதேனும் செய்திகள் வந்திருக்கிறதா என்று விசாரித்து விட்டு மல்லேஸ்வரம் போகலாம் என்ற எண்ணத்தில் போலீஸ் ஸ்டேஷன் சென்ற போதுதான் ரங்கன் ராமையாவும் அவனுடைய டிரைவரும் கொலையுண்ட செய்தி விநோதுக்குக் கிடைத்தது.

செய்தி விநோதை அதிர்ச்சியில் ஆழ்த்தியது. தான் இன்னும் சற்றுச் சுறுசுறுப்பாக இயங்கி இருந்தால் இதைத் தவிர்த்திருக்கலாமென்று அவனுள் ஒரு குற்ற உணர்வு.

திட்டத்தை அறிந்தும் நீல்கமல் தன்னிடம் மறைத்து விட்டாளோ என்று ஒரு சந்தேகம். உடனே நீல்கமல் தன்னிடம் எதையும் மறைக்க மாட்டாள் என்று ஒரு மாற்று எண்ணம்.

இனி தான் மிக மிக ஜாக்கிரதையாகச் செயல்பட வேண்டும். அதே சமயம் விரைவாகச் செயல்பட்டு அக் கோஷ்டியைச் சிறை செய்தாக வேண்டும் என்று அவனுக்குப் புரிந்தது.

பெங்களூர் போலீஸ் புலனாய்வுத் துறை கொலையாளிகளைக் கண்டு பிடிப்பதில் தீவிரமாக இறங்கியுள்ளதைப் புரிந்து கொண்டான். இவனுக்கு அவர்கள் அதிகம் முக்கியத்துவம் அளிக்காததையும் அவனால் கவனிக்க முடிந்தது. ஒரு விதத்தில் நல்லதாக அவனுக்குப்பட்டது.

தான் தங்கியிருக்கும் ஹோட்டல் பெயர், விலாசம், போன் நெம்பர் ஆகியவற்றைக்கொடுத்து முக்கிய தகவல்கள் தனக்கு வருமானால், செய்தி அனுப்பும்படி கேட்டுக் கொண்டான்.

போஸ்ட்மார்டம் ... மெடிக்கல் ரிப்போர்ட், கைரேகை... போன்று படிப்படியாகத் துப்புகள் சேகரித்துக் கர்னாடகா போலீஸ் நடவடிக்கை எடுப்பதற்குள், நீல் கமலை அஸ்திவாரமாகக் கொண்டு தலைவன் உட்பட அந்தக் கூட்டத்தை முழுவதுமாகத் தன்னால் வளைத்து விட முடியும் என்று விநோதுக்குள் ஒரு நம்பிக்கை. போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கிளம்பி அருணைச் சந்திக்கலாம் என்கிற எண்ணத்தில் மல்லேஸ்வரம் போனான்.

இவன் ஆறுவது க்ராஸ் தெருவில் நுழைவதற்கும், எதிரில் அருண் வருவதற்கும் சரியாக இருந்தது.

அளவிட முடியாத மகிழ்ச்சியில் ஜோஸ் மிதந்து கொண்டிருந்தான். இன்னும் சில தினங்களில் தனது இருட்டு வாழ்க்கை முடிந்து ஒரு புதிய சகாப்தம் தொடங்கப் போகிறது என்கிற எண்ணம்தான் அவனது மகிழ்ச்சிக்குக் காரணம்.

'பாஸ்....பாஸ்...' என்று இனி அவன் பயப்படத் தேவையில்லை. பங்கு பிரித்துத் தனக்குச் சேர வேண்டிய தொகையை 'பாஸ்' கொடுத்து விட்டுச் சிங்கப்பூர் போனதும் இந்தத் தொழிலுக்கு நிரந்தரமாக முழுக்கு போட்டு விடலாம்.

நீல் கமல் மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றித் தன் வசப்படுத்திக் கொண்டு மணந்து விட வேண்டும். இருவருக்கும் 'பாஸ்' கொடுக்கும் பணத்தை எடுத்துக் கொண்டு நீல் கமலுடன் வட இந்தியா போய் ஏதாவது ஒரு கிராமத்தில் நிரந்தரமாகத் தங்கிவிட வேண்டும். நிலம் கொஞ்சம் வாங்கிப் பயிர் செய்தால் வயிற்றுப் பாட்டுக் கவலையில்லை. நீல் கமலுடன் சொர்க்கமான வாழ்க்கை... அவளுடைய கடந்த காலம் பற்றி ஏன் மனத்தைப் போட்டு குழப்பிக் கொள்ள வேண்டும்? சினிமாக் காரிகளைப் பெரிய மனுஷன்கள் திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக இல்லையா என்ன? — இம்மாதிரியான எண்ணங்கள் அவனுள்!

அவன் செய்து முடிக்க வேண்டிய வேலை ஒன்றே ஒன்றுதான் பாக்கி உள்ளது.

'பாஸ்' உத்தரவுப்படி சென்னையிலிருந்து வந்திருக்கும் "சி. ஐ. டி.' பயலைக் குண்டு

கட்டாகக் கட்டி நாலு நாள் ஜெய்நகர் பங்களாவிலே உள்ளே அடைத்து வைக்க வேண்டும். பாஸே பயப்படுகிறார் என்றால் பயல் எமகாதகனாக இருக்க வேண்டும். உதவிக்கு நீல்கமலை வைத்துக் கொள் என்று பாஸ் சொன்னதில் அவனுக்கு ஏகக் குஷி. பயலை ஜெயநகர் பங்களாவிலே அடைத்து ரெண்டு ஆட்களைக் காவல் போட்டு பங்களா மாடியிலேயே நீல் கமலுடன்... நினைப்பதற்கே இனித்தது.

விஷயத்தைச் சொல்லலாம் என்று நேராக நீல் கமல் வீட்டுக்குப் போனான். அவளைக் காணவில்லை. வீடு பூட்டிக் கிடந்தது.

சி.ஐ.டி. பயலின் நடமாட்டங்களைக் கண்காணிப்பதற்காக நியமிக்கப்பட்டிருந்த செங்கனைப் பார்த்தால் விஷயங்கள் தெரியும். இரவு ஆட்களோடு போய்ப் பொடியனை மடக்கிப் போடலாம் என்று எண்ணியவனாய் செவன் ஹெவன் போனான்.

செங்கன் ஒரு புதுத் தகவல் கொடுத்தான்.

''அண்ணே 109-ம் நம்பர் அறை ஆளும் அந்த சி.ஐ.டி.க்கு உளவுங்க. சி.ஐ.டி. ரூம் சாவிகூட இவன் கிட்டேதான் இருக்கு. சி.ஐ.டி. ரூமிலே போய் இவன் உட்கார்ந்து இருந்ததைக் கூடப் பார்த்தேன். கொஞ்சம் முன்னாலே ஒரு ஆடோவிலே ஏறி, 'மல்லேஸ்வரம் ஹோகப்பா' என்று சொன்னான். அந்த சி.ஐ.டி. இன்னிக்குப் பூராவும் வரலே. எனக்கென்னவோ அவனைப் பார்க்கத்தான் இவனும் போயிருப்பான்னு தோணுது... நானும் பின்னாலேயே போயிருப்பேன். நான் இங்கே இல்லாத சமயம் ஒரு வேளை சி.ஐ.டி. வந்தான்னா என்ன செய்யறதுன்னு. தங்கிட்டேன்!'' என்றான்.

''நான் மல்லேஸ்வரம்போய் ஒரு ரவுண்டு அடிக்கறேன். ஆள் மாட்டறானான்னு பாக்கலாம். நீ நம்ப ரெண்டு ஆளுங்களைக் கூட்டி வந்து தயாரா இருந்துக்கோ. தகவல் கொடுக்கறேன். எப்படியும் இன்னிக்கு ராவுக்குள்ளே அந்தப் பயலை மடக்கியாகணும்!'' என்று சொல்லிவிட்டு ஜோஸ் கிளம்பினான்.

'சிம்பங்கி' தியேட்டருக்குச் சற்றுத் தள்ளி எதிரிலுள்ள பார்க்கில் அருணும் வினோதும் அமர்ந்து கொண்டனர்.

ரங்கன் ராமையா கொலையுண்டது பற்றிச் சற்று விவாதித்து விட்டு, இனி அவர்கள் செய்ய வேண்டியது பற்றி முடிவெடுக்கத் திட்டமிட்டார்கள்.

வினோத் பேசலானான்.

''அருண்! நீ நிழலைப்போல நீல்கமலைப் பின்தொடர வேண்டும். அவளுக்கு எந்த ஆபத்தும் வராமல் பாதுகாக்க வேண்டியது ரொம்பவும் அவசியம். நீல்கமலைப் பார்க்கச்சே உன் கண்ணுல அவ உடம்பு தென்படக் கூடாது. போலீஸ் டிபார்ட்மெண்டும், நாம்ப செய்ய வேண்டிய கடமை மட்டுமே நினைவுக்கு வரணும்....''

''அதெல்லாம் 'கவனமா' நடந்துப்பேன் சார்.''

''ஏழு மணிக்கு நீல்கமல் இங்கே வருவா. நான் மெஜஸ்டிக் பக்கத்திலே புதுசா ஒரு ரூம் எடுத்திருக்கேன். அந்த அட்ரஸை அவகிட்டே கொடுத்துட்டுச் சிலவிஷயங்களை அவளிடம் சொல்லியாகணும். அவ போனதும் ரெண்டு பேரும் ஏதாவது ஒரு ரெடிமேட் கடைக்குப் போய்ப் புதுசா துணி வாங்கிக்குவோம். நீ உன் பேண்ட், ஷர்ட் டைட் டிரஸ்ஸை மாத்திடு. பதிலா பைஜாமா, ஜிப்பா முஸ்லிம் குல்லா வாங்கிக்கோ. மீசையை எடுத்துடு. என் புது ரூமுக்குப் போவோம். இடத்தைக் கவனிச்சுக்கோ... சிவாஜி நகர்லே நீல் கமல் வீட்டுக்குப் பக்கத்



துலே நீயும் ஒரு வாட்ஜிலே ரூம் எடுத்துக்கோ. போன்ல அட்ரஸ் கொடுத்திடு....

''இன்னிக்கு ராத்திரி மெட்ராஸ் போலீஸ் கமிஷனர் கிட்டே போன்ல பேசலாம்னு இருக்கேன். மெட்ராஸ்லேந்து மஃப்டிலே உடனே பத்து போலீசை அனுப்பச் சொல்ல லாம்னு. எல்லாம் என் இஷ்டப்படி நடந்தா கோஷ்டியை இரண்டு தினங்களிலே மடக்கிட லாம்!''

''நீங்க எப்படி சார் அவ்வளவு நம்பிக் கையா சொல்றீங்க...''

''அருண், நான் அப்ப சொன்ன மாதிரி நீல் கமல்தான் நம்ப டிரம்ப் கார்ட். நம்ப ளோட அதிர்ஷ்டம் அவளுக்கு என் மேலே அளவிட முடியாத அட்ராக்ஷன். வெளிப் படையா அவ சொல்லலே ஆனாலும், இந்தக் கோஷ்டியை அவள் உதவியோட பிடிச்சப் புறம் நானே அவளைக் கல்யாணம் பண்ணிப் பேன்னு அவள் தனக்குள்ளாக ஒரு ஆசையை



''அப்பா! ஏன் அந்த மாமா கண்ணை மூடிண்டு கச்சேரி செய்யறார்?''

''ஜனங்களுக்குத் நம்மால் ஏற்படும் கஷ்டத் தைக் கண்ணால் பார்க்க வேண்டாம் என்று தான்.'' — வசந்தாகோவிந்தன்

வளர்த்துக் கொண்டு இருக்கா. அதை நாம் நமக்குச் சாதகமாக்கிக்கணும்.''

''இது மாதிரி அவளுக்கு நீங்க ஃபால்ஸ் ஹோப் கொடுக்கலாமா சார்...''

''திருடன் என்னென்ன தில்லு முல்லு பண்றானோ அதுக்கு ஒருபடி அதிகமா போலீ ஸும் பண்ணினாதான் திருடனைப் பிடிக்க முடியும். அவனுக்கும் நமக்கும் உள்ள வித்தியாசம், அவன் கெட்ட நோக்கில் செய்யறான். நாம்ப நீதியை நிலைநாட்டச் செய்யறோம்....''

''எல்லா போலீஸும் நீங்க நெனைக்கிற மாதிரி நடந்துக்கறாங்கன்னு நினைக்கறீங்களா?''

''நீ சொல்றது தனிக்கதை. இப்போ அதைப் பேச நமக்கு நேரம் கிடையாது. நீல்கமல் விஷயத்தில் ஒண்ணு சொல்றேன். அவளுக் குத் தண்டனை கிடைக்காமல் தப்புவிக்கலாம். அப்ரூவர் ஆக்கிடலாம். அது சரி. உனக்குத் தான் அவ மேலே ஒரு கண்ணுச்சே. வேணும்னு நீயே கல்யாணம் பண்ணிக்க லாமே....'' கண்ணைச் சிமிட்டியபடியே வினோத் கேட்டான்.

''என்ன சார் விளையாடறீங்களா? அவ ளோட ஜாலியா இருக்கிறது வேறே; கல்யா ணம் பண்ணிக்கிறது வேறே!''

''பெரிய ஆளுப்பா நீ! வா, மணி ஏழா கிறது. நீல் கமல் வந்து காத்துண்டு இருப்பா....''

இருவரும் மல்லேஸ்வரம் சர்க்கிள் பஸ் ஸ்டாண்ட் அருகில் காத்திருந்தனர்.

சரியாக ஏழே காலுக்கு நீல்கமல் வந்தாள்.

வெள்ளை அமெரிக்கன் ஜார்ஜெட் புடவை, வெள்ளை பாலிஸ்டர் லோ கட் பிளவுஸ், அப்சரஸ் மாதிரி இருந்தாள்.

அருண் 'க்ளீன் போல்ட்!'

வினோத் அவளுடைய டிரஸ்ஸைக் கவனிக் காதது மாதிரி 'பிஸினஸ் லைக்'காகப் பேசி னான். அவளுக்குத் தெரியும், 'டிரஸ்' தனக் காகத்தான் என்று.

''நீல் நாம்ப இங்கே ரொம்ப நேரம் நின்னு பேசுவது ஆபத்து. உங்க ஆள் எவனா வது கவனிச்சாலும் கவனிக்கலாம். ஆமாம். நீ பயந்த மாதிரி ஏதாவது விஷயம் உண்டா?''

''இல்லேங்க'' தலையாட்டினாள் நீல்.

அழகாகப்பட்டது அருணுக்கு.

''இந்தா இதுதான் என் புது ரூம் அட்ரஸ். போன் நம்பரும் இருக்கு. இவர்தான் அருண். எனக்கு உதவி செய்ய வந்திருக்கிறவர். உனக்கு எந்தவித ஆபத்தும் வராதபடி தள்ளி இருந்தே கவனிக்கச் சொல்லி இவர்கிட்டே சொல்லியிருக்கேன். எதுக்கும் நீ பயப் படாதே. டேவிட், ஜோஸ் எவனாவது வந்தா முறைப்பா நடந்துக்காதே. மிரு துவா பேசி ரகசியங்களைத் தெரிஞ்சுக்கோ. இதோ சிவாஜி நகர் பஸ் வருது. ஏறிப் போய்க்கோ. முடிஞ்சா இன்னிக்கு இரவு இல்லேன்னா நாளைக்காலை வீட்டுக்கு வந்து சந்திக்கறேன். வரச்சே ஏதாவது மாறு வேஷத்துலேதான் வருவேன். ஓகே...''

வேறு வழியில்லாது பஸ்ஸில் ஏறினாள் நீல். வினோதை வீட்டுக்கு அழைத்துப் போக லாம் என்று வந்தவளுக்கு அருணும் இருந்தது ஓர் ஏமாற்றம். மனதார நாலு வார்த்தைகள் பேச முடியவில்லையே என்கிற ஏக்கம் வேறு.

''சார்! நிஜமா சொல்றேன். உங்க மனசுலே மென்மைக்கே இடமில்லே சார். கழுத்தைப் பிடிச்சுத் தள்ளாத குறையாக, அவளை அனுப்பறீங்களே, அவளுக்கு எவ் வளவு ஏமாற்றம் தெரியுமா?'' அருண், வினோத்திடம் வாதிட்டான்.

''எந்தப் பொருளும் தள்ளித் தள்ளிப் போகச்சே தான் ஆசை அதிகமாகும். அவ கிட்டே காரியம் சாதிக்கணும்னு ஓரளவு இது மாதிரிதான் நான் நடந்துக்கணும்... ஒரேயடியாகவும் ஒதுங்கக் கூடாது. ஒரே யடியா ஒட்டிக்கவும் கூடாது! வா நம்ப போகலாம்.''

கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல் 'என்பார்களே அது மாதிரி இருந்தது ஜோஸிற்கு.

'டேய் பொடியா, அன்னிக்கு என் காரை பங்சர் பண்ணிவிட்டுத் தப்பிப் போனே இல்லே. இன்னிக்கு கவனிச்சுக்கறேன்' என்று

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!








GN-79-364 E Tam

**வாங்குவீர் நைஸில் — விரட்டுவீர் வியர்க்குருவை. விலை ரூ. 63 பைசாதான்.***

* அதிகபட்ச சில்லறை விற்பனை விலை. உள்ளூர் வரிகள் தனி.



அரிப்பு, எரிச்சல் போன்ற தொல்லைகளிலிருந்து மிகத் துரித நிவாரணம் தரவல்லது வியர்க்குரு பவுடர் ஒன்றுதான் நைஸில். விசேஷ மருந்துக் கலவையுள்ள நைஸில், எவ்வொரு கட்டத்திலும் வியர்க்குருவை எதிர்த்துப் போராடுகிறது.

1. அதிகம் வியர்க்காமல் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமூட்டுகிறது.

# பொறியைத் தட்டியதுமே...







காம்ப்டாலக்ஸ் ஸ்பாட்லைட்
துணிகளின் டிசைன்களைத் தனித்
தொளிரச் செய்கிறது—பார்ப்பவ-
ரைக் கவர்ந்திழுக்கும் வகையிலே.



உங்கள் வைரங்களிலே
மேலும் அதிக ஜொலிப்பு—
காம்ப்டாலக்ஸ்
ஸ்பாட்லைட் மூலம்.

PE-.-4366




காம்ப்டாலக்ஸ், எடுத்துப் பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ இணைப்புகளோ தேவையில்லை. பொருத்துங்களேன், பொறியைத் தட்டியதும், அதன் விற்கும் திறனை அறியலாமே!

1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**

கொஞ்ச தூரத்தில் அருணுடன் கூடப் போகும் விநோதைப் பார்த்துக் கறுவிக் கொண்டான்.

'மல்லேஸ்வரத்தில் எங்காவது கண்ணில் படுவான்' என்று எண்ணி வந்தவனுக்கு பஸ்ஸி லிருந்து இறங்கின உடனே விநோத் கண்ணில் பட்டது நல்ல சகுனமாகத் தோன்றியது.

எல்லாம் சரியாக நடந்தால் ஒரு வாரத்தில் நீல்கமல் அவனுக்கு!

மெதுவாக விநோதையும் அருணையும் பின் தொடர்ந்தான். இந்தத் தடவை தான் பின் தொடர்வது தெரியக்கூடாது என்று வெகு ஜாக்கிரதையாகப் போனான்.

விநோதும் அருணும் துணிக்கடை ஒன்றி னுள் நுழைந்ததும் தள்ளி எதிர்ப்புறம் இருந்த ஹோட்டல் ஒன்றில் துணிக்கடை கண்ணில் படும்படி உட்கார்ந்து கொண்டான்.

அரை மணியில் அவர்கள் வெளிவந்ததும் மறுபடியும் பின்தொடர்ந்தான்.

விநோத் தன் லாட்ஜுக்குள் அருணுடன் நுழைவதைப் பார்த்துக் கொண்டான்.

'டேய் பொடியா! வாட்சை மாத்தி எங் களை ஏமாத்தறியா... உன்னை இன்னிக்கு இரவு கவனிக்கிறேன்' என்று கறுவிக் கொண் டான். விநோத் தங்கியிருக்கும் அறையையும் வெளியில் இருந்தே அவனும் தெரிந்து கொள்ள முடிந்தது. விநோதைக் கடத்திச் செல்லத் திட்டம் தீட்டுவதற்காக, தன் சகாக் களைத் தேடிப் போனான். போகும் வழியில் ஓர் எண்ணம் தோன்ற 'பாஸ்' இருப்பிடத் துக்குப் போன் செய்து விநோத் தற்போது தங்கியிருக்கும் இடத்தின் விலாசத்தை பாஸி டம் சொல்லிவிடச் சொன்னான்.

இரவு சுமார் பதினொரு மணி இருக்கும்.

தூங்காமல் அறையில் நாற்காலியிலேயே உட்கார்ந்து கொண்டு தான் சென்னையி லிருந்து பெங்களூர் வந்தது வரையிலான சம் பவங்களைக் கோவையாக நினைவுக்குக் கொண்டு வந்து விநோத் அசை போட்டான்.

இன்னும் இருபத்து நாலு மணி நேரத்துக் குள் தான் என்னென்ன செய்ய வேண்டும் என்பதையும் முடிவு செய்து கொண்டான். அவன் கணக்குப்படி ஜோனையும், டேவிட் டையும் எப்படியும் மறுநாள் மதியத்துக்குள் கைது செய்தாக வேண்டும். அவர்கள் கைதா கும் செய்தி அவர்களுடைய பாஸிற்குத் தெரி யக் கூடாது.

ஜோனைத் தனியாகப் பிரித்து, நீல் கமலுடன் சேர்த்து வைப்பதாக ஆசை காட்டி விஷயங்களைக் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

அந்த நூலை வைத்துக் கொண்டு அதில் ஏணி போல் ஏறி 'பாஸை'ப் பிடித்தாக வேண்டும்....

'பாஸ்' என்பவன் யார்?

விநோதுக்கும் புதிராக இருந்தது.

''டக்...டக்...'' அறைக்கதவைத் தட்டும் ஓசை கேட்டது.

கதவைத் திறக்காமல் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்.

ஒரு போலீஸ்காரர் நின்று கொண்டிருந் தார்.




○ ''டைப்பிஸ்ட் கமலாவைக் கல்யாணம் பண் ணிக் கிட்டாரே நம்ப ரங்கசாமி, அவனுக்கு போனஸ் கிடைச்சிருக்கு தெரியுமா?''

''அது என்ன போனஸ்?''

''அவளோட மாமியார் அவங்க கூடவே இருக் கப் போறாளாம்!''

●

○ ''மாணவர்கள் எல்லாம் என்ன கூச்சல் போடறாங்க?''

''போனஸ் வேணுமாம்!''

''என்ன போனஸ்?''

''எட்டு பரீட்சை எழுதினவங்களுக்கு ஒரு பரீட் சையில் எழுதாமலேயே மார்க்குப் போட்டுத் தூக்கி விடணுமாம்!''

●

○ ''என்ன சார், சம்பந்தம் இல்லாமே ஜெய மாலினியோட கவர்ச்சி நடனத்தை, 'சுபம்'னு படம் முடிஞ்சப் புறம் காட்டறீங்களாமே உங்க புதிய படத்திலே!''

''நம்ம படம் பாக்கவர ரசிகர்கள் 'போனஸ்' அது இதுன்னு ஆரம்பிக்கிறத்துக்கு முன்னாடி நானே இது மாதிரி ஐடியாவோட செஞ்சுட் டேன்! எப்படி?''

—ஜி. நடராஜன்

சிடி போலீஸிலிருந்து ஏதோ செய்தி என்று அவனுக்குப் புரிந்தது.

கதவைத் திறந்தான்.

''சி.ஐ.டி. ஐயா நீங்க தானே! உங்களை போலீஸ் இன்ஸ்பெக்டர் கூட்டி வரச் சொன் னாரு'' என்றார் அந்தப் போலீஸ்காரர்.

பேண்ட், ஷர்ட் மாட்டிக் கொண்டான். பேண்ட்பாக்கெட்டில் துப்பாக்கி இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டான். இருந்தது.

இருவரும் லாட்ஜுக்கு வெளியே வந்தனர்.

ஜீப் ஒன்று நின்றிருந்தது.

பின்னால் ஏறினான்.

இரண்டு 'முரட்டுக் கரங்கள் அவனது வாயை அடைத்து மூக்கில் மயக்க மருந்து நடவிய கர்சீப்பை அழுத்தியது.

விநோதின் நினைவு பறந்தது.

(தொடரும்)

# சிகாமணியும் சூடாமணியும்!

(ஓர் உரையாடல்)



தலைசிறந்த பரதநாட்டிய ஆசான் வழுவூர் திரு ராமையா பிள்ளை இவ்வாண்டு இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் இசை விழாவுக்குத் தலைமை தாங்கி 'கலா சிகாமணி' என்ற விருதைப் பெறவிருக்கிறார். கமலா, வைஜயந்திமாலா, பத்மா சுப்பிரமணியம் போன்ற பல தலைசிறந்த நாட்டிய மணிகளை உருவாக்கியவர். பத்மஸ்ரீ, கலைமாமணி, இசைப் பேரறிஞர் போன்ற பல விருதுகளைப் பெற்றவர்.

திருமதி சுதாராணி ரகுபதி பெங்களூரில் பட்டப் படிப்பும், அமெரிக்காவில் உதவித் தொகை பெற்று உயர் படிப்பும் முடித்தவர். மூன்று வயதில் நடனமாடத் தொடங்கிப் பிறகு தஞ்சாவூர் கிட்டப்பா பிள்ளையிடம் பரதக்கலையும், திருமதி கௌரி அம்மாளிடம் அபிநயமும் பயின்றவர். இவ்வாண்டு கிருஷ்ணகான சபையில் இவர் நிருத்திய சூடாமணி விருது பெறுகிறார்.

ராமையா பிள்ளையும் சுதாராணி ரகுபதியும் சந்தித்த போது.....

வழுவூர்: வாம்மா...உட்கார்...

சுதாராணி: நமஸ்காரம். தங்களைப் போன்ற அபூர்வமான ஆசானைச் சந்தித்து உரையாடுவதற்கு வாய்ப்புக் கிடைத்ததை மிகப் பெரிய கௌரவமாகக் கருதுகிறேன். என்னை ஆசீர்வதிக்கணும்... (நமஸ்கரிக்கிறார்).

வழுவூர்: என்னுடைய பரிபூரண ஆசீர்வாதம் உனக்கு எப்போதும் உண்டு....

சுதாராணி: நான் மிகச் சின்ன வயசிலேயே கால்களில் சதங்கை கட்டிக் கொண்டு மேடை ஏறினவள். அப்போலேயிருந்தே உங்களோட நட்டுவாங்கம்னு எனக்கு ரொம்பப் பிடிக்கும். கமலா நடனக் கச்சேரி செய்தாங்கன்னு ரெண்டு தடவை பார்ப்பேன். ஒரு தடவை அவங்க நாட்டியத்தைப் பார்த்து ரசிக்கறத்துக்குன்னு போவேன். இன்னொரு தடவை நீங்க நட்டுவாங்கம் பண்ற பக்கமா உட்கார்ந்து உங்க நட்டுவாங்கத்தைக் கவனித்து மனத்துக்குள்ளே நடனமாடிக் கொள்வேன்...

வழுவூர்: ரொம்ப சந்தோஷம்... குறிப்பிட்ட சமூகத்தினர்தான் பரதநாட்டியம் ஆடணும்னு இருந்த சமூக நிலை மாறி இக்கலையில் உண்மையான ஆர்வமும் திறமையும் இருக்கறவங்க எவர் வேண்டுமானாலும் இக்கலையைப் பயின்று கச்சேரி செய்யலாம் என்று ஏற்பட்டிருப்பதை நான் முழு மனசோடு வரவேற்கிறேன். இக்கலை நசித்து விடுமோ என்கிற சூழ்நிலை மாறித் தற்போது இக்கலை செழிப்

போடு வளர்த்து வருவதைக் காணச் சந்தோஷமா இருக்கு....

சுதாராணி: இக்கலை செழித்தோங்க நீங்க செய்து வரும் தொண்டு ரொம்பவும் அபூர்வமானது...

வழுவூர்: ஏதோ என்னாலானதைச் செய்றேன். ஆயிரம் வருஷ சரித்திரம் உள்ளது எங்கள் நாட்டிய பரம்பரை. இம்மாதிரி பரம்பரைலே வந்துட்டுச் சும்மா இருந்துட முடியுமா.... அதோட எனக்கு ஆத்ம பூர்வமா நாட்டியக்கலைன்னா உயிர். அதான் என்னாலானதைச் செய்ய ஆர்வம் கொண்டுள்ளேன். இப்போகூட என் மகன் சாம்ராஜைக் கல்லூரிப் படிப்பை விடச்சொல்லி விட்டு, இக்கலைக்கே முழு நேர அளவில் தொண்டு செய்யச் சொல்லிட்டேன். பரம்பரை தொடரணுமே....

சுதாராணி: உங்க மாதிரியான சிந்தனை, ஈடுபாடு எங்கேயோ ஒருவருக்குத்தான் இருக்க முடியும். நான் உங்ககிட்டே படிக்காத மாணவி.. இக்கலை பற்றி எது சொன்னாலும் தெரிஞ்சுக்க ஆவலா இருக்கேன்...

வழுவூர்: பரதக்கலையின் புகழைப் பரப்புவதற்காகச் சிலர் இருப்பதைப் போல, இக்கலையின் பெருமையைக் குறைக்கும் விதமாகச் சில பேர் நடந்துக்கறாங்க. பரதத்தை எப்படி வேண்டுமானாலும், எங்கே வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் ஆடலாம் என்று ஒரு மனப்பான்மை நிலவுறது. இது ரொம்பவும் தவறானது. புராதன காலத்துலேயிருந்து இக்கலையை எந்தெந்த சமயத்துலே எப்படி எப்படி ஆடணும்னு விதிமுறைகள் இருந்து வருகின்றது. இந்த விதிமுறைகளைச் சிலர் புறக்கணித்து ஆடறதைக் காணும் போது வருத்தமா இருக்கு....

சுதாராணி: விதிமுறைகள்னு இருந்தா அவைகளினின்று மாறுபட்டு வேறு விதமா நடந்துங்கறதுங்கற நிலை எல்லாத் துறையிலேயும் எக்காலத்திலும் இருந்துதான் வருகிறது.

வழுவூர்: நீ சொல்றது சரிதான். நிழலும் வெய்யிலும் எப்பவும் உண்டுதான். ஆனால் பரதக் கலையின் பெருமைக்குக் குந்தகம் வர அளவுக்கு நிலைமை போய்விடக் கூடாது என்கிற ஆதங்கம் எனக்கு.

சுதாராணி: உங்களுடைய கவலை நியாயமானதுதான். எனக்கு இன்னொரு விஷயத்துலே உங்க கருத்து தேவை...

வழுவூர்: கேளேன்...

நடனத்தோற்றங்கள்: பம்பாயில் அரங்கேறிய, ராஜராஜேஸ்வரி பரதநாட்டிய கலா மந்திர் மாணவி, திருமதி நிர்மலா கண்ணன்



சுதாராணி: நடனம் ஆடும் போது ஒரு குறிப்பிட்ட உணர்ச்சியை வெளிப்படுத்தி அடவுகளையும் முத்திரைகளையும் பலவிதமாகக் காட்ட முடியும். அழுவது போன்ற உணர்ச்சி நிலையை வெளிப்படுத்தி லேசாகக் கண்களைக் கசக்குவது போலவும் காட்டலாம்.... கைகளால் முகத்தை மூடி அழுவது போலவும் வெளிப்படுத்தலாம். கேவுவது போன்ற பாவத்திலும் காட்டலாம். எந்த வகை சிலாக்கியமானது என்று தாங்கள் கருதுகிறீர்கள்?...

வழுவூர்: நடனத்தில் நாடகம் கலக்கக் கூடாது.

சுதாராணி: பரத நாட்டியத்திற்கு Subtlety ரொம்ப அவசியம்கிறதை அற்புதமா ஒரே வரியிலே சொல்லிட்டீங்க.

வழுவூர்: புராதன நாட்டிய நாடகங்களிலே நாயக நாயகி பாவங்களை வெளிப்படுத்த நாட்டிய சாஸ்திரத்தில் வகுக்கப்பட்ட வழிமுறைகள் உண்டு. அதற்கும் தனிப்பட்டவர்கள் பரதம் பயிலும் போது வெளிப்படுத்தும் பாவங்களுக்கும் சில ஒற்றுமைகள் உண்டு. ஆனால் அம்மாதிரி வெளிப்படுத்தும் போது பரதக் கலைக்கு ஏற்ப நளினமும், மென்மையும் வேண்டும். நாடக முத்திரைகள் கூடாது.

சுதாராணி: பரதக் கலையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உயர்வானதும், நுண்மையானதுமான ரசனைகளும், சித்திரம், சிற்பம் போன்ற நுண் கலைகளில் ஆர்வமும் ஓரளவு தேர்ச்சியும் இருந்தால் சிறப்பாக இருக்கும் என்பது என் கருத்து...

வழுவூர்: பரதக் கலையின் பல அடவு நிலைகளைச் சிற்பிகள் சிற்பங்களாக அற்புதத் திறமையுடன் வடித்துள்ளதைப் பல புராதனக் கோவில்களில் காண்கிறோம். பரதக் கலை பயில்பவர்களும் தாங்கள் வெளிப்படுத்தப் போகும், அடவு முத்திரைகளைச் சிற்பி போல் மனத்தில் வடித்துக் கொண்டு



''பாகவதர் ரொம்ப பணக் கஷ்டத்தில் இருக்கார் போலிருக்கே!''
''எப்படித் தெரிஞ்சுது?''
'' 'Borrow கிருஷ்ணய்யா'ன்னு அழுத்திப் பாடறாரே!...''
—ஜி. நடராஜன்

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

அதற்கேற்ப ஆத்ம திருப்தி ஏற்படும் அளவுக்கு நடனமாடுவது அவசியம். அப்போது தான் இக்கலையின் முழுமையான பரிணாமத்தை வெளிப்படுத்த முடியும்.

சுதாராணி: பரதக் கலை என்று இறங்கி விட்டால் முழுமையாகத் தன்னை அக் கலைக்கே அர்ப்பணித்துக் கொண்டால்தான் அக்கலையில் சிறப்புற்று விளங்க முடியும் என்று ஒரு கருத்து நிலவுகிறது. அர்ப்பணிப்பது என்றால் பலவித வியாக்யானம் சொல்லப்படுகிறது. உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்களேன்.

வழுவூர்: பரதக் கலை என்று மட்டும் அல்ல. எக்கலையாகட்டும். அதில் சிறப்புற்று விளங்க வேண்டுமானால், அதில் ஈடுபடுபவர்கள் தங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்வது அவசியம்தான். அர்ப்பணிப்பது என்றால், என்னைப் பொறுத்தமட்டில் அக்கலையில் ஆத்ம பூர்வமாக மனத்தைச் செலுத்தி, அக்கலையின் நுணுக்கங்களைச் சிறப்பாகக் கற்று, கிரகித்துக் கொண்டு, எல்லாவற்றையும் கற்றுவிட்டது என்கிற அகம்பாவத்தை விடுத்து இனி கற்க வேண்டியது ஏராளம் என்கிற மன நோக்குடன் பயின்று, அக்கலையில் தேர்ச்சி பெற வேண்டும். அக்கலையின் பெருமையைச் சிறந்தோங்கச் செய்யும் அளவுக்கு அக்கலையில் ஈடுபாடும் வெளிப்பாட்டுத் திறமையில் உன்னதமும் அவசியம்...

சுதாராணி: டார்வினின் 'Survival of the fittest' என்கிற விதி போல் பரதக் கலையிலும் ஒரு நிலைமை இன்று இருக்கிறதே!

வழுவூர்: அது சரிதான்; திறமை இருந்தால் எந்தத் துறையானாலும் அத் திறமையை அமுக்கிவிட முடியாது.

சுதாராணி: ஆனால் திறமையிருந்தாலும் சில நடனமணிகள் சோபிக்காமல் போவதைக் காண முடிகிறதே!

வழுவூர்: பரதக் கலைக்கு ஒரு முக்கிய தேவை உண்டு. 'கொட்டு பாதி, கூத்து பாதி' என்கிற மொழி கேள்விப்பட்டிருப்பாய். ஒரு நடனமணியின் சிறப்பான நடனத் திறமைக்கு நட்டுவாங்கமும், மற்ற பக்க வாத்தியமும் சிறப்பாக இருக்க வேண்டும். நாட்டியாசார்யா பரம்பரை வழியில் வந்தவர்களது நட்டுவாங்கத்தின் சிறப்பை இச்சந்தர்ப்பங்கள் தெளிவாக உணர்த்துகின்றன.

சுதாராணி: நாட்டியாசார்யர்கள் பரம்பரையின் எண்ணிக்கை குறைந்து வருகிறதே...

வழுவூர்: குறைந்தாலும் சிஷ்ய பரம்பரைகளைத் தோற்றுவித்துக் கொண்டுதான் வருகிறோம்....

சுதாராணி: பெண்கள் நட்டு வாங்கம் செய்வது பற்றித் தங்கள் கருத்து என்ன?

வழுவூர்: அது எனக்கு ஏற்கவில்லை. சிலர் நடனமாடினாலும் மிகச் சிறப்பாகத் திகழ முடியும் என்று கணிப்பேன். சிலர் நடனமாடுவதைவிட நடனத்தைப்பயில்வித்தால் இக்கலைக்கு சிறப்பாகச் சேவை செய்ய முடியும் என்று கணிப்பேன். என் கருத்துப்படி பெண்கள் நட்டுவாங்கத்தில் இறங்கினால்



''ரஜனி ஸ்டைல்ல மோரிங்கைத் தூக்கிப் போட்டுப் பிடிக்க வாசிச்சார்...''
''சரி, அப்புறம் என்னாச்சு?''
''நாக்கு அவுட்!''

-வ. தேனப்பன்

அவர்களது நாட்டியத் திறமைக்கு அது குந்தகமாகவே இருக்கும்..

சுதாராணி: நடனம் கற்றுத் தருவது மட்டுமின்றிப் பரதக் கலைக்கு வேறு சில சிறப்பான தொண்டுகளையும் தாங்கள் செய்திருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். தெரிந்து கொள்ள ஆர்வமாக இருக்கிறது.

வழுவூர்: பரத நாட்டியம் ஆடுவோரின் உடைகள் ஆந்திர, மஹாராஷ்டிர மாநில கிராமப் பெண்களின் உடைகளை ஒத்திருந்தது. பண்டைய சிற்பங்களை ஆராய்ந்து, தற்போதைய கால ரசனைக்கு ஏற்பச் சற்று மாற்றங்கள் செய்து பரத நாட்டிய உடைகளை இவ்விதம் இருக்கலாம் என்று 'டிசைன்' செய்தேன். தற்போது பெரும்பாலும் நான் 'டிசைன்' செய்த உடை முறையைத்தான் நடனமணிகள் பின் பற்றி அணிகின்றனர்...

இன்னொன்று, முன்பு நடனமாடுபவர்களுடன் பக்கவாத்தியக் காரர்களும் நின்று கொண்டே ஆடுவார்கள். இந்நிலையை மாற்றி பக்கவாத்தியக்காரர்கள் வலப் பக்கம் உட்கார்ந்து வாசிக்கும் வழிமுறையையும் ஏற்படுத்தினேன்.

சுதாராணி: வலப்பக்கம் என்பது எதற்காக?

வழுவூர்: பக்க வாத்தியக்காரர்களின் வலது கரம் சபையோரை நோக்கி இருக்க வேண்டும் என்பது ஒரு காரணம். வேறு சில காரணங்களும் உள்ளன.

சுதாராணி: இக்கலையில் மேலும் சிறப்பாகச் செய்ய வேண்டும் என்று ஏதேனும் திட்டங்கள் வைத்துள்ளீர்களா?

வழுவூர்: சில விருப்பங்கள் உண்டு. ஏற்கனவே இருக்கும் பிறமொழிப் பாடல்கள் தவிர பெரும்பாலும் தமிழ்ப் பாடல்களுக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும் என்பது என் எண்ணம். டி. கே. சி.யும், 'கல்கி'யும் 1943-ல் இக்கோரிக்கையை என்னிடம் எழுப்பிய பிறகு, தமிழ்ப்பாடல்களுக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கிறேன். இந்நிலை தொடர வேண்டும்.

பரதக் கலையைக் கற்பவர்கள் வேறு, அவர்களை ஆட்டி வைக்கும் நாட்டியாச்சார்ய பரம்பரை என்பது வேறு என்கிற நிலையில் இக்கலை தமிழகத்தில் வளர்ந்து வருகிறது. இதற்கேற்ப, நாட்டியாச்சார்ய சிஷ்ய பரம்பரையும் சந்ததி பரம்பரையும் சிறந்தோங்க வேண்டும்.

சுதாராணி: எனக்குத் தாங்கள் ஏதேனும் அறிவுரை அளித்தால் ஏற்கிறேன்.

வழுவூர்: உன் நடனக் கச்சேரிகளைக் கண்டிருக்கிறேன். திறமையுடன் ஆடுகிறாய். மேலும் சிறப்புற்று நீ புகழ் பெறவேண்டும் என்பது என் ஆசை.

சுதாராணி: பெயருக்கும் புகழுக்கும் முக்கியத்வம் அளிக்காமல் கலைக்கு நம்மாலானதைச் செய்ய வேண்டும் என்கிற நோக்கில் மட்டுமே இதுவரை செயல்பட்டு வந்தேன்.



''வாங்க சார்! எந்த மாதிரி செருப்பு வேணும்?'' —செருப்புக் கடைக்காரர்
''இரண்டு செருப்பும் ஒரே சுருதியில் ஓசைக் கூடிய ஜோடியாக வேண்டும்!''-சங்கீத வித்வான்

—வசந்தாகோவிந்தன்

கலையைச் சிறந்தோங்கச் செய்யப் புகழும் அவசியம் என்கிற நிலை உருவாகியுள்ளது. தங்களைப் போன்றவர்களின் ஆசி இருந்தால் அதுவே நான் மேலும் உயர வழி வகுக்கும்.

வழுவூர்: என் ஆசி எப்போதும் உண்டு.

சுதாராணி: நன்றி. நான் வரட்டுமா....

உரையாடல் தொகுப்பு: **ஜாயகன்**
புகைப்படம்: **விங்கன் ஸ்டுடியோ**



TEXTILES, SUGAR,
INDUSTRIAL CHEMICALS,
ALCOHOLIC BEVERAGES,
VANASPATI, PVC, RAYON TYRE CORD,
FERTILIZERS,
ELECTRONIC CALCULATORS,
IRON CASTINGS.
IN THE SERVICE OF THE NATION
DCM
THE DELHI CLOTH AND GENERAL MILLS CO. LTD., DELHI

# ஒரு சங்கீத கலாநிதி பற்றிய சொற்சித்திரம்

## டாக்டர் நாராயண மேனன்

**1980** ஜனவரி முதல் தேதி, இசைத் தேவதையின் சங்கீத வித்வத் சபை என்ற கர்ப்பக்கிருஹத்தில் இன்னொருசங்கீதகலாநிதி உதிப்பார். கர்நாடக சங்கீத வித்வான்கள் இந்தப் பட்டத்தைப் பெறுவதைத்தான் அனைத்திலும் சிறந்த கௌரவமாகக் கருதுகிறார்கள். காரணம் இது வித்வத் சபையின் நிபுணர் குழாம் அளிக்கும் பட்டம்; சம அந்தஸ்து உடைய வித்வான்கள் ஒன்று சேர்ந்து அளிக்கும் விருது. அரசோ, ஏதேனும் ஒரு நிறுவனமோ அல்லது செல்வந்தரோ அளிப்பது அல்ல.

இந்த ஆண்டு சங்கீத கலாநிதி பட்டம் பெறும் வீணை கே.எஸ். நாராயணசாமி, பளபளப்பான காரியங்களைச் செய்து பிராபல்யம் அடைபவர் அல்ல; தமது விரல்களைக்கொண்டு இயந்திரமாக இயங்கி அமர்க்களப்படுத்திப் பிரமிக்க வைப்பவரும் அல்ல. அடிக்கடி பத்திரிகைத் தலைப்புக்களில் இடம் பெறுவதோ அல்லது தமது வாசிப்பைக் கேட்கப் பெருந்திரளான மக்களைக் கூட்டி நீண்ட நேரக் கரகோஷத்தைப் பெறுவதோ அவருக்குத் தெரியாத விஷயங்கள். அவருக்கு இசையை அப்பியசிப்பது என்பது சம்பிரதாயம் என்பதன் உண்மையான அர்த்தத்தை நாடிச் செல்வதுதான். உண்மையான சம்பிரதாய உபாசகன் யார்? கர்நாடக பத்ததி என்பதின் சாரம் என்ன? இவற்றுக்கு விடைகள் தயாராக இல்லை. அப்படி இருந்தால் அவை அனைவராலும் ஒப்புக் கொள்ளக் கூடியனவாய் இராது. ஆனால், பொதுவாக, கர்நாடக சங்கீத சம்பிரதாயம் என்பது கடந்த 2500 ஆண்டுகளில் வழிவழியாக வந்த, படிப்படியாக உருவான சட்டங்களும் கொள்கைகளும் என்று சொல்லலாம். தலைமுறை தலைமுறையாக வந்துள்ள இந்தச் சம்பிரதாயங்கள் நாம் அனுபவிப்பதற்காக மேதைகள் பலர் சேர்த்து வைத்துள்ள சொத்து. அவர்களது நம்பிக்கைகள், அவர்கள் சங்கீதத்தை அப்பியசித்த விதங்கள், அவர்களுடைய சிருஷ்டித் திறன்கள் ஆகியவற்றை உள்ளடக்கியது. உலகெங்கிலும் எந்தச் சம்பிரதாயத்துக்கும் பொருந்துகிற விளக்கம் இது.

இத்தகைய சம்பரதாயத்தை நாடிச்செல்கிற நாராயணசாமி அபூர்வமாகவே இன்று நாம் காணக் கூடிய வித்வான்களுள் ஒருவர் எனினும் அவர் எதை நாடிச் செல்கிறாரோ அது அதிமுக்கியமானது.

இசையின் இதர சில துறைகளையும் அவர் அமைதியாக ஆராய்ந்துள்ளார். கலைத்திறன் என்பது என்ன? மிகக் குறைந்த அளவு முயற்சியுடன், இயல்பான இலகுவுடன் நாம் சாதிக்க நினைப்பதைச் சாதித்து விடுவதுதான். இது இசைக்கு மட்டுமின்றி எல்லாக் கலைகளுக்கும் பொருந்தும் — விஞ்ஞான ரீதியான அணுகுமுறை. இதுதான் நாராயணசாமியின் போதனை ஆற்றலின் விசேஷம். அவர், ஒவ்வொரு மாணவரும் தமது மறு பிரதியாக இருக்குமாறு கற்றுத் தர மாட்டார். அவர்கள் அவர்களாகவே இருக்கவேண்டும் என்றுதான் பிரயாசைப் படுவார். மாணவன் அல்லது மாணவி தன்னைத்தானே உணர்ந்து தனது இயல்புப்படி தான் பயிலும் கலையில் நிறைவு பெற வேண்டும் என்று பிரயாசைப்படுவார். அதே நேரத்தில் இசையின் அடிப்படை உண்மைகளிலும் அவற்றை அடைவதற்கான இயல்பானதும் விஞ்ஞான ரீதியானதுமான மார்க்கங்களிலும் பரிச்சயம் ஏற்படுத்துவார். கற்றுத் தருவது என்பதே கற்றுக் கொள்வதற்கு ஒரு சிறந்த வழி என்பதைப் பலர் எண்ணிப் பார்ப்பதில்லை. தான் சொல்லித் தருகிற பல விஷயங்கள் குறித்தும் 'ஏன், எப்படி' என்ற கேள்விகளைக் குரு தனக்குத்தானே கேட்டுக் கொள்ள நேர்வதால் பல புதிய விஷயங்களை அறிந்துகொள்ளவும் தன்னைத்தானே திருத்திக் கொள்ளவும் வாய்ப்புக் கிட்டுகிறது.

நாராயணசாமி சிறந்த வீணை வித்வான் மட்டுமல்ல, நல்ல பாடகரும் கூட. மதிப்புக்குரிய கல்விமான்; ஆராய்ச்சியாளர். இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவர் — இன்று சங்கீதத் துறையில் மட்டுமின்றி வேறுஎல்லாத் துறைகளிலுமே அரிதாகி விட்ட — பண்பாளர். அவர் வாய் திறந்து ஒரு கடுமையான சொல்லைக் கூற நான் கேட்டதில்லை. முப்பது ஆண்டுகளுக்கு மேலாக அவரை எனக்குத் தெரியும். தமக்குச் சமதையான இதர வித்வான்களைப் பற்றி அன்பற்றதான ஒரு வார்த்தையை அவர் பேசியதில்லை. இது நடிப்பு அல்ல. அடக்கமாக இருப்பது போன்று பாவனை செய்தே பிறரைக் கேலிக்குள்ளாக்குகிற காரியமும் அல்ல. மனிதர்களை, அவர்கள் எப்படி எப்படி இருக்கிறார்களோ அப்படி அப்படியே ஏற்றுக் கொள்கிற மனப்பக்குவம் நாராயணசாமிக்கு உண்டு. அவர்களின் குறைகளை மறந்து குணங்களை மட்டும் கொள்

---

ராகங்கள் என்றால் ஆசைகள் என்று பொருள், நாம் ஆண்டவன்மேல் கொண்ட ஆசைகளின் வெளிப்பாடே, ராகங்களாக வெளிவருகின்றன.

-டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் உபன்யாசத்திலிருந்து — வ. தேனப்பன்

---



## இசை அடகு!

தஞ்சாவூரிலிருந்த இராமபத்திர மூப்பனார் எனும் நண்பரிடம் நரசையர் என்பது பொன் கடனாகக் கேட்டார். 'கடன் என்றால் அடகும் பொருள் என்ன வைத்துள்ளீர்' என மூப்பனார் வினவினார். அப்பொழுது சங்கீத உலகில் கொடி கட்டிப் பறந்தவரும் சங்கராபரண இராகம்பாடுவதிலே மிக நிபுணர் என்பதால் சங்கராபரண நரசையர் என்னும் பட்டம் பெற்றவருமான அவர், 'எனது சங்கராபரண இராகத்தையே அடகு வைக்கிறேன்' என்றார். அடகு வைக்க அவரிடம் இருந்த சிறந்த ஆபரணம் இது ஒன்றே.

சில மாதங்கள் கழித்து, கும்பகோணத்துப் பெருஞ்செல்வந்தரான அப்புராயர் வீட்டுத் திருமணத்தில் நரசையர் பாடுகையில், எல்லோரும் இவரைச் சங்கராபரணம் பாடும்படி வற்புறுத்தவே, சங்கராபரணம் அடகு வைக்கப்பெற்ற வரலாற்றைக் கூறினார்.

அப்புராயர் என்பது பொன்னையும் உரியவட்டியையும் கொடுத்து சங்கராபரணத்தை மீட்ட பின்பாடே அவரது நாவு அந்த ஆபரணத்தைப் பூண்டது. மூப்பனாரோ வட்டியையும் முதலையும் இசையை அடகு வைத்தவருக்கே திருப்பிக் கொடுத்து விட்டார். இசையைச் சிறைவைத்த குற்றத்துக்காக!

-டாக்டர் உ.வே.சா. அவர்களின் 'புதியதும் பழையதும்' என்ற நூலிலிருந்து. அனுப்பியவர்: பூ. சொல்விளக்கும் பெருமாள்

---

இற பெருமனம் பெற்றவர். அவருடைய இந்த அடக்கம் ஒரு மகத்தான சம்பிரதாயத்தினிடம் அவருக்குள்ள மரியாதை காரணமாக ஏற்பட்டது; அறிய, அறிய இன்னும் அறியப்பட வேண்டியது நிறைய உள்ளது என்ற உணர்வைப் பெறுவதால் உண்டானது.

அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் பாலக்காட்டிலிருந்து ஆறு மைல் தள்ளிக் கொடுவாயூர் என்ற ஊரில் பிறந்தவர் நாராயணசாமி. இவர் தாயாருக்குச் சங்கீதத்தில் ஆர்வம் இருந்தது. தமது சகோதரர் கே.எஸ். கிருஷ்ண அய்யரிடம் இளம் வயதில் பயின்ற நாராயணசாமி தமது ஏழாவது வயதிலேயே கச்சேரி செய்து மோதிரப் பரிசு பெற்றார். நான்காவது 'ஃபாரம்' படிக்கும் போது 14-வது வயதில் அண்ணாமலை இசைக் கல்லூரி (பின்னால் அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் இசைத்துறை) சிறந்த மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கி பயிற்சிஅளிப்பதாகக் கேள்விப்பட்டு மனுச் செய்து அதனைப் பெற்றார். இவருடன் அந்த ஆண்டில் சேர்ந்தவர் டி. கே. ரங்காச்சாரி என நினைக்கிறேன். அண்ணாமலை இசைக் கல்லூரியில் முதன் முதலாகச் சேர்ந்த இந்த இருவருமே பின்னாளில் நன்கு பிரகாசித்தனர். அப்போது வித்வான் சபேச அய்யர் முதல்வராக விளங்கினார். பொன்னையா பிள்ளை வாய்ப்பாட்டு, மிருதங்கம் இரண்டும் சொல்லித் தந்தார். தேசமங்கலம் சுப்பிரமணிய அய்யர் வீணை பயிற்றுவித்தார். நாராயணசாமி முக்கியமாகக் கற்றுக் கொண்டது வாய்ப்பாட்டுத் தான். வீணையும் மிருதங்கமும் அவருக்குத் துணைப் பாடங்களாயின.

பின்னால் அண்ணாமலை பல்கலைக் கழகத்திலேயே கோமதி சங்கர அய்யருக்கு உதவியாக மாணவர்களுக்கு வீணை கற்றுத் தரும் ஆசானாகச் சேர்ந்தார் நாராயணசாமி. ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு சுவாதித் திருநாள் இசைக் கல்லூரியில் சேர்ந்து முதல்வர் செம்மங்குடிக்குக் கீழ் பலவிதப் பொறுப்புகளையும் ஏற்றுப் பணியாற்றினார். ஓய்வு பெறும்போது அந்தக் கல்லூரியின் முதல்வராகவே விளங்கிய நாராயணசாமி, அங்கு ஆற்றிய தொண்டுகள் பல எனினும் சுவாதித் திருநாள் கிருதிகளைச் சேகரித்துச் செப்பனிட்டதைக் குறிப்பாகச் சொல்லலாம்.

அவர் அப் பதவியிலிருந்து ஓய்வு பெறவே காத்திருந்தது போல் பம்பாய் சண்முகானந்தா சங்கீத வித்யாலயம் அவரை முதல்வராக்கிக் கொண்டது. கடந்த ஒன்பது ஆண்டுகளாக அவர் அப் பதவியை வகிப்பதானது அந்த வித்யாலயத்துக்கு ஒரு புது நோக்கையும் கௌரவத்தையும் அளித்துள்ளது. அப் பள்ளிக்குத் தனது அங்கீகாரத்தை அளிக்கும் நம்பிக்கை பம்பாய் பல்கலைக் கழகத்துக்கு ஏற்பட்டது என்றால் அதற்கு இவரது தலைமையும் ஒரு முக்கிய காரணம்.

பலமுறை அயல்நாடுகளுக்குப் பல்வேறு இசை நிறுவனங்களின் அழைப்பை ஏற்றுச் சென்று கர்நாடக இசையின் சிறப்பை உணர்த்தியவர்; பாரதத்தின் மாநில, தேசிய விருதுகள் பலவற்றைப் பெற்றவர்.

இவ்வளவுக்குப் பிறகும் அவர் கர்நாடக சங்கீத உலகின் ஓர் எளிமையும் அடக்கமும் அமைதியும் மிக்க கலைவாணராக விளங்குகிறார் என்றால் காரணம், அவர் பட்டம், பதவி, பாராட்டுக்களுக்காக ஏங்கியதோ போராடியதோ இல்லை; தாமாகவே அவை வந்து அடைந்த போது நன்றியுடன் ஏற்று மகிழாமலும் இல்லை என்பதுதான்.

எப்போதுமே அவரது வாழ்க்கையில் திருப்தியும் மகிழ்ச்சியும் நிலவுகிறது. ஏனெனில் அவர் வாழ்க்கையைச் சரியானபடி மதிப்பீடு செய்திருப்பதுதான். 'நற்குணங்கள், சன்மானம் பெறத் தேவையில்லை; நற்குணங்களை ஒருவன் பெற்றிருப்பதற்கு அந்த நற்குணங்களே சிறந்த சன்மானமாகி விடுகின்றன' என்று அவர் உறுதியாக நம்புகிறார்.

**[தென்னிந்திய, வட இந்தியக் கலைஞர்கள் அனைவரது பெரு மதிப்புக்கும் உரிய கட்டுரை ஆசிரியர் டாக்டர் நாராயண மேனன் அகில இந்திய ரேடியோவில் மிக உன்னதமான பதவிகளை வகித்து, இன்று பம்பாய் தேசிய கலைக் கேந்திரத்தின் இயக்குனராக விளங்குகிறார்.]**

மேலட்டையில்: **கே. எஸ். நாராயணசாமி** வண்ணப்படம் எடுத்தவர்: **உத்ரா**








# சிறிய சபைகளின் பெரிய பணி



நூறு அங்கத்தினர்களே உள்ள சிறு சபை, இசைக் கலைஞர்களை வரவழைத்துச் சிறிய இடத்தில் கச்சேரிகள் செய்யச்சொல்லி ரசிக்கிறார்கள். 'சேம்பர் மியூசிக்' எனப்படும் இந்த வகையான கச்சேரிகள் சென்னையில் இன்று மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. இம்மாதிரி ஏழு மினி சபாக்கள் கர்நாடக இசைக்கு மட்டும் இயங்கிவருகின்றன. இயங்கும் விதமும் பிரச்னைகளும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாகத்தானிருக்கின்றன. இதில் Fifty, Fifty என்ற குழுதான் முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்டதாம். எஸ். ஒய். கிருஷ்ணசாமி ஆரம்பித்த இச்சபையின் தலைவராக இன்று எம்பெருமானார் செட்டி இருக்கிறார். மியூசிக் கிளப்பின் முன்னாள் தலைவரும் இந்நாள் மியூசிக் அகாடமி செயலாளருமான நடராஜன் சேம்பர் மியூசிக் கைப்பற்றிக் கூறுகிறார்:

''இன்று சபாக்கள் எல்லாமே நாடகம், நாட்டியம் சினிமா என்று தங்களது அங்கத்தினர்களுக்குப் போட்டி போட்டுக் கொண்டு இவைகளையே திரும்பத் திரும்பக் கொடுக்கிறார்கள். இதனால் கர்நாடக சங்கீதத்துக்கு வாய்ப்பில்லாமல் போய் விடுகிறது. நல்ல சாஸ்திரீய கர்நாடக இசையைக் கேட்டு ரசிக்க வேண்டும் என்று விரும்புபவர்களுக்காகவே உருவானதுதான் ''சேம்பர் மியூசிக்''. எங்களுடைய மியூசிக் கிளப்பை 1967-ம் ஆண்டு தொடங்கினோம். மாதம் ஒரு சங்கீதக் கச்சேரி அளித்து வருகிறோம். கச்சேரி முடிந்தவுடன் அங்கேயே எல்லாருக்கும் இரவு உணவு அளிக்கப்படுகிறது. இந்தக் கிளப்பில் 100 தம்பதியினர் — அதாவது 200 பேர் — அங்கத்தினர்களாக உள்ளனர். மாதம் ஒரு

இடமிருந்து வலமாக : எம்பெருமானார்; ஆர். சீனிவாசன்; ஏ. எஸ். நூளத்து; கே. எஸ். ராமசாமி; நடராஜன்; மைதிலி கிருஷ்ணசாமி; ராகவுராவ்.

கச்சேரிக்காக அவர்கள் ஆவலோடு காத்திருக்கிறார்கள். எல்லோருமே சரிசமமாக மதிக்கப்படுகிறார்கள். காரணம் அவர்கள் கட்டும் சந்தாத் தொகை ஒரே மாதிரிதான். ஆனால் சபாக்களில் அப்படியல்லவே. ஆயுள் சந்தா என்றால் முதல் வரிசை. அந்த வருடச் சந்தா என்றால் அதிலும் பல பிரிவுகள் என்று பாகுபாடு செய்து விடுகிறார்கள் இல்லையா? ஆனால் இங்கு யார் முதலில் வருகிறார்களோ, அவர்களுக்கு முதலிடம்.

''அதுமட்டுமல்லாமல் நாங்கள்எல்லாருமே ஒரு குடும்பத்தைப் போல் பழகுகிறோம். குறிப்பாக, பெண்களுக்குக் கச்சேரிக்கு முன்னும் பின்னும் ஒருவரையொருவர் தெரிந்துகொள்ளவும் நண்பர்களாகவும் இம்மாதிரி குழுக்கள் வழி செய்கின்றன.

''சபாக்களில் அரட்டைக்கச்சேரிக்காகவும், குசலம் விசாரிப்பதற்காகவும் வருபவர்கள் பலர். கச்சேரி நடக்கும் போது பக்கத்திலுள்ளவர்களுடன் பேசுவதற்காகவே வருபவர்களும் சிலர். ஆனால் சேம்பர் மியூசிக் கேட்க வருபவர்கள் எல்லோருமே இசையில் லயித்து அமைதியாக ரசித்துக் கேட்பவர்கள்.

''மியூசிக் கிளப்பைப் பொறுத்த வரை நாங்கள் புகழ்பெற்ற தலைசிறந்த இசைக்கலைஞர்களின் கச்சேரிகளைத்தான் அளித்து வருகிறோம். காரணம், 'நாங்கள் மாதா மாதம் நல்ல கச்சேரியைக் கேட்கத்தான் வருகிறோமே. ஒழிய நீங்கள் அறிமுகம் என்று போட்டு எங்களை அவஸ்தைப் படுத்தாதீர்கள்' என்று அங்கத்தினர்கள் கூறுகிறார்கள். புதியவர்களை ஊக்குவிக்கவும், வாய்ப்புத் தரவும் சரியான இடம் மியூசிக் அகாடமி போன்ற பண வசதி படைத்த ஸ்தாபனங்கள்தாம். ஆனால் எங்களைப் போன்ற சேம்பர் மியூசிக் நடத்தும் வேறு சிலர் கஷ்டப்பட்டுப் புதியவர்களை ஊக்குவித்துக் கொண்டும் இருக்கிறார்கள் என்பதைச் சொல்ல வேண்டும்.

''நல்ல ரசிகர்களைத் தருவதால் இசைக் கலைஞர்களும் எங்களைப் போன்று சேம்பர் மியூசிக் நடத்துபவர்களுக்கு அதிகமாக ஒத்துழைப்புத் தருகிறார்கள்.''

சென்னையில் இயங்கும் Fifty Fifty, மியூசிக் சர்க்கிள், மியூசிக் கிளப், ராக தரங்கிணி, சத் சங்கீதா, நாதோபாசனா, விவேகா கல்சரல் சென்டர், இவற்றில் 'ராக தரங்கிணி' பெண்களாலே நடத்தப்படும் ஒரு குழு. இதே பெயரில் பெசன்ட் நகரிலும் ஒரு குழு உள்ளது. இரண்டையுமே ஆரம்பித்தவர் திருமதி மைதிலி கிருஷ்ணசாமிதான். திரு கே. எஸ். ராமசாமியின் பொறுப்பிலுள்ள மியூசிக் சர்க்கிளில், வெளி மாநிலங்களிலிருந்தும் இசைக் கலைஞர்களை வரவழைத்துக் கச்சேரிகளை நடத்துவதுமட்டுமல்லாமல் ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படிக்கவும் வழி வகை செய்கின்றனர். விவேகா கல்சரல் சென்டர் என்ற குழுவை நடத்தும் குளத்து புதிய பாடகர்களுக்கு 'காட் ஃபாதர்'ராக இருக்கிறார் என்று சொன்னால் அது மிகையல்ல. புதுமைக்கும் வழி கோலி, பழமைக்கும் மரியாதை கொடுப்பவர்கள்தாம் நாதோபாசனாவைச் சேர்ந்த சீனிவாசனும், சத் சங்கீதாவைச் சேர்ந்த ராகவ ராவும்.

சேம்பர் மியூசிக்கைப் பற்றி எம். எஸ். கருத்து என்ன தெரியுமா? ''இவ்வளவு அமைதியாகவும், நன்கு ரசித்தும் கேட்பவர்களிருந்தால் நிறுத்தவே மனம் வராமல் நான் பாடிக் கொண்டேயிருப்பேன்.'' சேம்பர் மியூசிக்கின் தரத்துக்கு இதுவே உரைகல் அல்லவா!

—பேட்டி: சலன்

---






இசைவிழா என்றால் காண்டீனைச் சம்பந்தப்படுத்தி ஓரிரு ஜோக்குகள் பத்திரிகையில் வராமல் போகாது! சங்கீத ஸீஸனில் ரொம்பவும் பிரபலமான அம்சம் ''அகாதமி காண்டீன்''. கச்சேரியில் கூட்டம் இருக்கிறதோ இல்லையோ காண்டீனில் கூட்டம் குறையாது. இதை நடத்தி வரும் திரு டி.எஸ். கிருஷ்ணமூர்த்தியின் சில சுவையான அனுபவங்கள்:

''எங்கள் காண்டீனில் கோதுமை அல்வா, குலாப்ஜாமூன், காசி அல்வா ரொம்பவும் பெயர் பெற்றவை. கொட்டகை போட்டு அங்கேயே சூடாகச் சமைத்துக் காலை டிபன் முதல் இரவு சாப்பாடுவரை வழங்குகிறோம்.

''ஒவ்வொரு அகாதமி கச்சேரியைப் பற்றியும் இங்குதான் எல்லோரும் காரசாரமாக விவாதிப்பார்கள்.

''எங்கள் கோதுமை அல்வாவை அதிகமாக விரும்பிச் சாப்பிடுவார் செம்மங்குடி அவர்கள். காராபூந்தி கைதவறி உருண்டு விழும் போதெல்லாம் 'பாட்டுக்குப் பக்க வாத்தியம் சேராதது போல இது சேர மறுக்கிறதே' என்று சொல்லிச் சிரிப்பார்.

''பலர் கச்சேரிக்கு வருவது போல் வந்தாலும், காண்டீனில்தான் போண்டா, தோசையோடு அரட்டைக் கச்சேரி நடத்துவது வழக்கம். பலர் ''நாளைக்கு அந்த அல்வாவோடு, இந்தக் காரம் தயார் பண்ணு'' என்று பல அயிட்டங்களைக் கூறி 'அட்வான்ஸ் புக்கிங்' செய்வது வேடிக்கையாக இருக்கும்.

''இங்கு சாப்பிட்டு விட்டுக் கிளம்பும்போது 'இனி நான் இரண்டு கச்சேரிக்கு வாசிக்கலாம்' என்று சிரித்தபடி தெம்புடன் சொல்வார் குன்னக்குடி.''

பேட்டி : ''சித்ரா''




இங்கிலாந்தில் நான் இருந்தபோது எடின் பரோவில் நடைபெற்ற அகில உலக இசை விழாவுக்குப் போயிருந்தேன்.

ஆண்டு தோறும் நடைபெறுகிற இந்தத் திருவிழாவுக்கு இங்கிலாந்து மட்டுமில்லை, ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும், மற்றும் உலகின் பல பகுதிகளிலிருந்தும் புகழ் பெற்ற கலைஞர்களும் இசையன்பர்களும், நாடக ரசிகர்களும் ஆயிரக் கணக்கில் வந்து கூடுகிறார்கள். காலையிலிருந்து நடுநிசிவரை அந்த நகரத்தின் பல பாகங்களிலும் உள்ள பற்பல அரங்குகளிலும் சபைகளிலும் மன்றங்களிலும் தொடர்ச்சியாகக் கச்சேரிகளும், நடனங்களும், நாடகங்களும் நடந்த வண்ணமாக இருக்கும்!

வீதிகளில் எல்லாம் ஒரே கூட்டம்! ஆடவரும் பெண்டிரும், குழந்தைகளுமாக ஒரே கலகலப்பு! தெருக்களில் நடந்து சென்றால் எங்கு பார்த்தாலும் விதம் விதமான வண்ண வண்ண ஆடைகள், பல வகையான ''கௌன்''கள், கொண்டை அலங்காரங்கள், தொப்பிகள், கைப்பைகள், காமிராக்கள்! முக்கியமான கட்டடங்களில் எல்லாம் உலக நாடுகள் அனைத்தின் தேசியக் கொடிகள்! கண் போகிற திசையெல்லாம் ''அகில உலக இசை நாடகத் திருவிழா'' என்ற அறிவிப்புக்கள் மின்சார விளக்குகளிலே பளிச் பளிச் என்று மின்னல் அடிக்கின்றன! நடை பாதைகளில் எல்லாம் திருவிழாக் கடைகள், விடுதிகள், கடிகாரக் கடைகள், ஆடை அங்காடிகள், நகை மாளிகைகள்!

இப்படி ஊர் முழுவதும் விழாக் கோலம் பூண்டு அட்டகாசமாகக் காட்சி தருகிற இந்தத் திருவிழாவில், நான் சென்ற இசை நிகழ்ச்சிகளில் எல்லாம் எனக்கு ஒரு எதிர்பாராத அனுபவம் கிட்டியது! அதாவது மேற்கத்திய தேசத்தின் தொன்மையான பழைய மரபு இசையிலே நம்முடைய தமிழ் நாட்டு இராகங்கள் சில அடிக்கடி வந்து போயின! முக்கியமாக ஹரிகாம்போதி, சங்கராபரணம், கல்யாணி, பேகடா போன்ற சில ராகங்களின் சாயலைக் கேட்டு மெய்சிலிர்த்துப் போனேன்!

இதன் பிறகு எனது ஐரோப்பியப் பயணத்தின் போது இத்தாலி தேசத்தில் பல நகரங்களில் இதே அனுபவம் எனக்கு மீண்டும் மீண்டும் ஏற்பட்டது. ரோம் நகரத்திலும், ப்ளாரன்ஸிலும் நமது இராகங்களில் மேலும் சிலவற்றைக் கேட்டேன். வெனிஸ் நகரத்தில் ஒரு பௌர்ணமி இரவில் கண்டோலாப் படகிலே சென்ற போது அந்தப் படகோட்டியின் இத்தாலி மொழிப் பாடல்களிலே நமது செஞ்சுருட்டியும், வராளியும், பேகடாவும் ஹம்சத்வனியும், சக்கைப் போடு போட்டதைக் கேட்டு உடம்பு புல்லரித்தது.

இங்கிலாந்துக்குத் திரும்பியதும் இசையன்பரான எனது ஆங்கிலேய நண்டர் ஒருவரிடம் இதைப் பற்றி நான் சொன்ன போது, அவர் அயர்லாந்தில் இருந்த நமது நண்பர் — ஒரு பெண்மணி — இதுபற்றி ஒரு வரலாற்று ஆராய்ச்சியே செய்திருப்பதாகவும், அந்த அம்மாளிடம் கர்நாடக சங்கீத ஒலிப்பதிவுகள் ஏராளமாக இருப்பதாகவும் குறிப்பிட்டார். சில நாட்கள் கழித்து நான் அயர்லாந்து சென்ற போது பெல்பாஸ்ட் நகரத்தில் அந்த அம்மணியின் வீட்டுக்குப் போயிருந்தேன். திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையவர்களின் நாகஸ்வர ஒலிப்பதிவு அவரிடம் மணிக்கணக்காக இருந்தது!

''உங்கள் நாட்டு வாத்திய சங்கீதத்தில் எனக்கு ஒரு மோகம் உண்டு. அதிலும் உங்கள் நாகஸ்வரம் என்றால் எனக்கு உயிர்! நாகஸ்வரத்திலும் உங்கள் — உச்சரிப்பதற்குக் கஷ்டப்படுகிறேனே — அந்தத் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை, அவருடைய தோடியும், பேகடாவும் ஒண்டர்புல், மார்வெலஸ்!'' என்று பொரிந்து தள்ளி விட்டார் அந்த அம்மணி!

நான் பல மாதங்கள் கழித்து இந்தியா திரும்பிய போது ராஜரத்தினம் பிள்ளை உயிரோடு இருந்திருந்தால் இந்த நிகழ்ச்சியை

அவரிடம் கட்டாயம் சொல்லியிருப்பேன். அவரும் மகிழ்ந்திருப்பார். ஏனென்றால் யாரை மதித்தாலும் மதிக்கா விட்டாலும் ரசிகர்களை அவர் எப்படி மதித்தார் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். சான்றாக ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன்.

ஒருசமயம் அவரை ரேடியோவில் 'நேருக்கு நேர் உரையாடல்' நிகழ்ச்சிக்காகப் பேட்டி கண்டோம். பல கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றில் ஒன்று:

''எத்தனையோ பொன்னாடைகளும், விருதுகளும், பரிசுகளும், வேறு பல சன்மானங்களும் உங்களுக்கு வந்து குவிந்திருக்கின்றன. அரசாங்கத்திலும், பல பெரிய இடங்களிலும் எத்தனையோ மரியாதைகள் உங்களுக்கு நடந்திருக்கின்றன. இவற்றில் எல்லாம் எதை நீங்கள் மிகவும் மதித்துப் போற்றுகிறீர்கள்?''

அகில உலக நாகஸ்வரச் சக்கரவர்த்தி என்று போட்டுக் கொள்வதில் ஒரு சந்தோஷம் அவருக்கு! அந்தச் சக்கரவர்த்தி இதற்குப் பதில் சொன்னார்:

''தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் திருமண ஊர்வலம் ஒன்றில் வாசிக்கப் போயிருந்தேன். ராகமாலிகை பல்லவி வாசித்துக் கொண்டு வருகிறேன். இரவு ஒரு மணி இருக்கும். பியாகடை! அதில் ஒரு இடத்தில் என்னையும் மறந்து அபூர்வமான ஒரு சங்கதி விழுந்தது. உடனே அந்த ஊர்வலத்தில் எனக்கு அருகில் ஒரு இடத்திலிருந்து 'சபாஷ்' என்று ஒரு குரல் வந்தது. திரும்பிப் பார்த்தேன். ஒரு மண்டை விளக்கு நின்று கொண்டிருந்தான்!''

''யார்? மண்டை விளக்கா?''

''ஆமாம் சார்! திருமண வீடுகளில் ஊர்வலத்தின் போது தலையிலே காஸ் லைட்டைத் தூக்கிக் கொண்டு வருவார்கள் அல்லவா, அவர்களில் ஒருவன், ஒரு மண்டை விளக்கு, இந்த ''சபாஷ்!'' போட்டிருக்கிறான்! அப்படியே கையெடுத்துக் கும்பிட்டு விட்டேன்! எத்தனையோ கலியாண வீடுகளில் எவ்வளவோ பெரிய வித்வான்களை எல்லாம் கேட்டுக் கேட்டு அவனுக்கு அத்தனை ஞானம்! அவன் கொடுத்த அந்த 'சபாஷ்' இருக்கிறதே, அதற்கு எந்த விருதும், எந்தப் பரிசும், எந்தச் சம்மானமும் ஈடாகாது!''

ஒரு பெரிய கலைமேதையின் உள்ளத்தில் நீங்காத நினைவாக நிலை பெற்றுவிட்ட சபாஷ்-மண்டை விளக்கு, உண்மையான கலைநெஞ்சம் எதை மதிக்கிறது என்ற பெரிய உண்மைக்கே 'காஸ்லைட்' போட்டுக் காட்டி விட்டது அல்லவா!

---

# மீண்டும் ஓர் அறுவை!

அவன்: ''அடுத்த ஞாயிற்றுக்கிழமை 'பிக்னிக்' போறேன் வரியாடா?''

இவன்: ''ம்ஹூம்...: நான் வரலே..., அன்னிக்கு எங்க தாத்தாவோட எனக்கு எங்கேஜ்மெண்ட் இருக்கு...''

அவன்: ''தாத்தாவோடன்னு எப்படிடா 'எங்கேஜ்மெண்ட்'ன்னு ஆகும். 'ஓல்ட் ஏஜ்மெண்ட்' ன்னு சொல்லு!'' - பி. வேணுகோபால்

✖

மனைவி: ''வீட்டுக்குள்ளயே நுழையலே. அதுக்குள்ளே எங்கப்பா, அம்மா வந்திருக்காங்க என்று எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

கணவர்: ''நம்ம தெருவிலே நுழையறபோதே முந்திரிப்பருப்பு நெய்யிலே வறுக்கிற வாசனை வந்திச்சு. அதை வைச்சுத்தான் கண்டு பிடிச்சேன்! - ஆர். கோபால கிருஷ்ணன்



மனைவி: இந்தப் புத்தகத்தைப் படிக்கும் பொழுது ஏன் அடிக்கடி தும்முகிறீர்கள்...?

கணவன்: 'பொடி' எழுத்தாச்சே...

- எஸ். ராமன்

✖

''நாடகத்துக்குத் தலைமை தாங்கித் தலைவர் வாழ்த்துரை வழங்குறபோது, ரோடு ஸ்க்ரீனைப் போடவா? அல்லது தர்பார் ஸ்க்ரீனைப் போடவா? இல்லே பூங்கா ஸ்க்ரீனைப் போடவா?''

''தலைவர் தலைக்கு மேலே எது இருக்கோ அந்த ஸ்க்ரீனைப் போடு!''

- கோவி. பரஞ்ஜோதி

✖

''உங்க ரெண்டாவது மனைவி பூனை வளர்க்க ஆசைப்படறதுக்குப் போய் ஏன் சார் கோபப்படுறீங்க?''

''முதல்தாரத்துப் பசங்க இண்டர்வியூ போகும் போது குறுக்கே விடறத்துக்குத் தானே அவ வளர்க்க ஆசைப்படறது!'' - அ. ராமதாஸ்

✖

கண்ணன்: ''கார் விபத்து ஏற்பட்டதற்குக் காரணம் என்ன?''

முரளி: ''நில், கவனி, புறப்படு என்ற போர்டை நின்று கவனித்து விட்டுப் புறப்பட்டேன்! எதிரே வந்த லாரியைக் கவனிக்கவில்லே. என் காரில் மோதிவிட்டது!''

- லலிதா செல்லப்பா

# ''நவ பாரதத்தின் ஆலயங்கள்''

ஆலைகள், அணைக்கட்டுகள்,
பாலங்கள் முதலியன
''நவ பாரதத்தின் ஆலயங்கள்''
சிற்பக் கலைஞர்களும், பொறி இயல்
நிபுணர்களும், நவீன ஆலயங்களைக்
கற்பனையில் வடிக்கிறார்கள்.
ராக்ஃபோர்ட் சிமெண்ட் அவர்களின்
கருத்தை உறுதியாக ஆக்கிப் படைத்து
வடிவம் தருகிறது.

ராக்ஃபோர்ட் தனிச் சிறப்பின் மரபுக்கு ஒரு இலக்கணம்



**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்**
டால்மியாபுரம்-621651 (தமிழ் நாடு) தலைமையகம் ''ஹன்ஸாலயா''
(11, 12ம் மாடி) 15, பாரகம்பா ரோட், நியூ டில்லி-110001.

GOVAN DCB-79.TAM






• பிடில் வித்வான் பெயர் என்ன சார்?
• அர்ஜுனன் சார், அர்ஜுனன்! அதான் காதுல அம்பு தொடுக்கிற மாதிரி பிடிலில் வில்லைப் போடறார்!







'காரம் பண்ணடி'.. 'காரம் பண்ணடி'.. என்று திருப்பித் திருப்பி பாடுறார்.. ஒரு தடவை 'ஸ்பீட் பண்ணடி'ன்னு மாத்தி பாடினால் என்ன?

# ஹாஸ்ய ஸ்வரங்கள்







ரெம்போ.. ரெம்போ..
நாங்க தனி ஆவர்த்தனம் வாசிக்கும் போது நீங்க டிரான்சிஸ்டர்லே 'ரெம்போ' கேட்டுண்டிருக்கீங்களே?. நியாயமா?


உம்ம பையன் ஜலதரங்கம் வாசிக்கும் போது மயங்கி போயிட்டேன், சார்!
மயக்கம் என்ன, போனதுமே உண்டாகும்! அவன் ஜலதரங்கம் கிண்ணத்திலே 'விஸ்கி. ஒயின். பிராந்தி. பீர், ரம்'னு ஊத்தறான்!


நான் ஒரு மடையன்! இசை விழாவுக்காக ஹியரிங் எய்டை ரிப்பேர் பண்ணிக்கிட்டேன்.. கண்ணாடியை மாத்திக்கலே... கண்ணாடிதான் முக்கியம்!


இசைவிழா
XYZ SABHA


மியூசிக் காலேஜ்லே ஃபெய்ல் ஆகிறவங்களுக்காக 'ம்யூஸிக் டுடோரியல் காலேஜ்' ஆரம்பிக்கப் போறேன்!
மார்வெலஸ் ஒண்டர்ஃபுல் ஐடியா!


பாகவதர்வாள்! கான்டீனை ஏது இவ்வளவு அக்கறையா விசாரிக்கிறீங்க?
வந்து.. லாபமா இருந்துதுன்னு கச்சேரிக்கு முழுக்குப் போட்டுட்டு அடுத்த வருஷம் கான்டீன் போட்டுடலாம்னு பார்க்கிறேன்!



# மிருதங்க பூபதி

இவ்வாண்டு தமிழிசைச் சங்கத்தால் சிறப்பிக்கப்படுகிறவர் பிரபல மிருதங்க வித்வான் திரு. ஸி. எஸ். முருக பூபதி.

பட்டங்களும் புகழாரங்களும் இவருக்குப் புதியவை அல்ல. ஏற்கனவே பத்மஸ்ரீ, கலை மாமணி போன்ற சிறப்பான பட்டங்களைப் பெற்றுள்ள இவர் இசை மேதைகளான மதுரை மணி ஐயர், அரியக்குடி, சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, ஜி.என்.பி. போன்றோர்களுக்கு மிருதங்கம் வாசித்துள்ளார். தற்போது முன்னணியில் இருக்கும் வித்வான்களில் பலருக்கும் வாசித்து வருகிறார்.

திரு முருக பூபதியைச் சந்தித்த போது அவர் சில கருத்துக்களை வெளியிட்டார்.

"எங்கள் பரம்பரையே சங்கீதப் பரம்பரைதான். என் தந்தை, என் அண்ணன் ஆகியோரெல்லாம் அந்தக் காலத்திலேயே பெரிய வித்வான்கள். என் அண்ணனிடம் தான் நான் சிட்சை எடுத்துக் கொண்டேன். எனது பத்தாவது வயதில் முதல் கச்சேரி செய்தேன். ஆனால் செம்மங்குடி அவர்களுக்கு நான் முதன் முதல் வாசித்த போதுதான் எனக்குப் பெயரும் புகழும் கிடைத்தது.

செம்மங்குடிக்குப் பாலக்காடு மணி ஐயர் வாசிப்பதாக இருந்தது. ஏதோ காரணத்தால் மணி ஐயர் வர முடியாமல் போய், அவருக்குப் பதில் நான் வாசிக்க வாய்ப்பு ஏற்பட்டது. அந்த இசைமேதை மூலம் நான் எடுத்த பெயர்தான் இன்று இந்நிலைவரை நான் உயர வழி வகுத்துள்ளது.

எவ்வளவு பெரிய பாடகராக இருந்தாலும் சரி, மிருதங்க வித்வானாக இருந்தாலும் சரி, இருவரும் ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்துகொண்டு, ஒருவருக்கொருவர் அனுசரித்துக் கச்சேரி செய்தால்தான் சோபிக்கும். என்னைக் கேட்டால் பாட்டும், மிருதங்கமும் கணவன் மனைவி போன்றவை!

கர்னாடக சங்கீதத்துக்கு முன்பளவு மதிப்பில்லை. அந்தக் காலத்திலெல்லாம் ராஜாக்களும், பிரபுக்களும், கலைஞர்களைச் சிறப்பாக ஆதரித்தனர். சங்கீதமே வாழ்க்கை என்று கலைஞர்களும் வாழ்ந்தார்கள். கலை தழைத்தது. இந்நிலையில் தற்போது மாற்றம் நிகழ்ந்துள்ளது.

ஆனால் ஒன்று — கர்னாடக சங்கீதம் அழியாது. தமிழ் இசைச் சங்கம், அகாதமி, போன்ற பல சங்கங்கள் தற்போது கர்னாடக சங்கீதம் நசியாமல் தழைத் தோங்கத் தங்களாலான தொண்டுகளைச் செய்து வருகின்றன. அரசாங்கமும் சங்கீதக் கல்லூரி வைத்து நடத்துகிறது.

ஆனாலும் என்னைப் பொறுத்த வரை குருகுல வாசமுறையில் சங்கீதம் பயிற்சி பெறுவதுதான் சிறப்பான முறை என்பேன்!" —பேட்டி: முக்கா

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publicat[illegible] Private Ltd. at the Bharathan Press, Guindy, Madras [illegible]032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு